

திருநெல்வேலி

# அரசு அருங்காட்சியகக் கையேடு



ஆசிரியர்

நா. சுலைமான்

காப்பாட்சியர்

அரசு அருங்காட்சியகம், மதுரை.

வெளியிடுபவர்

அருங்காட்சியகங்களின் ஆணையர்

அரசு அருங்காட்சியகம், சென்னை–600 008.

# அருங்காட்சியகக் கையேடு

## திருநெல்வேலி

ஆசிரியர்
**நா. சுலைமான்,**
காப்பாட்சியர்,
அரசு அருங்காட்சியகம், திருநெல்வேலி.

**வெளியிடுபவர்**
**அருங்காட்சியகங்களின் ஆணையர்,**
**அரசு அருங்காட்சியகம், சென்னை—600 008.**

கண். தீனதயாளன், இ.ஆ.ப.,
அருங்காட்சியகங்களின் ஆணையர்,
அரசு அருங்காட்சியகம்,
சென்னை – 600 008.

# அணிந்துரை

திருநெல்வேலி மாவட்டம் ஒரு தொன்மையான மாவட்டம் ஆகும். ஆங்கிலேயரை எதிர்த்ததில் புலித்தேவன், வீரபாண்டிய கட்டபொம்மன், வீரன் அழகு முத்துக்கோன் போன்ற வீரப்பெருமக்களும், எழுச்சிக் கலைஞர் சுப்பிரமணியபாரதி, பாபநாசம் சிவம் போன்றோரும், கப்பலோட்டிய தமிழன் வ.உ. சிதம்பரனார் போன்ற பெரும் தலைவர்கள் தோன்றிய மாவட்டம்–நாளடைவில் பல மாவட்டங்களாக நிர்வாக் காரணத்திற்காகப் பிரிக்கப் பட்டாலும், தாமிரபரணி ஆறு ஓடும் நெல்லை மாவட்டம் ஒரு செழுமையான மாவட்டமாகும். குற்றால அருவியில் சாரல் விழாவைக் காண ஏராளமான மக்கள் ஆண்டு தோறும் வந்து செல்கின்றனர்.

மாவட்டம் முழுவதும் ஏராளமான கோயில்கள் உள்ளன. சோழர், பாண்டியர், சேரன், நாயக்கர் என பல மன்னர் பரம்பரையினர் ஆட்சி செய்த பகுதி இது. அதிக அளவில் பெருங்கற்கால நாகரீகச் சின்னம் இம்மாவட்டத்தில் உள்ளது. குறிப்பாக ஆதிச்சநல்லூர் பகுதியாகும். அதன் காலம் 2000 ஆண்டுகளுக்கு முற்பட்டது. இங்கு கிடைத்த 'தாய்த் தெய்வம்' படிமம் உலகப் புகழ் பெற்றது.

இப்பகுதியில் சமணம் சிறப்பான நிலையில் இருந்தது என்பதற்குச் சான்றாக குகைக் கோயில் தமிழ் பிராமி கல்வெட்டுக்களும், சமணத் திருமேனிகளும் நிறைந்து காணப்படுகின்றன. வைணவ மற்றும் சைவ சமணக் கோயில்களும் ஏராளமான கோயில் தேர்களும், சுவடிகளும் பட்டயங்களும் இம்மாவட்டத்தில் நிறைந்து காணப்படுகின்றன. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் நெல்லையில் தொடங்கப்பட்டு ஏராளமான தமிழ் நூல்களை வெளியிட்டுள்ளது. பேச்சுத் தமிழில் திருநெல்வேலிக்கு ஒரு தனித்தன்மை உண்டு.

இம்மாவட்டத்தில் 1992–ஆம் ஆண்டு அமைக்கப் பட்டுள்ள அரசு அருங்காட்சியகம் இம்மாவட்டத்தின் கலை, பண்பாடு, நாகரீகம், வனச் செழுமை, சுதந்திரப் போராட்ட வரலாற்றுச் செய்திகள் போன்றவற்றை ஓரளவு கொண்டிருந்தாலும் வருங்காலத்தில் கல்விப் பணிகளிலும், ஆய்வுப் பணிகளிலும் சிறந்து விளங்கும் ஓர் அருங்காட்சியகமாக இவ்வருங்காட்சியகம் செயல்படும்.

இக்கையேட்டின், ஆசிரியா திரு. நா. சுலைமான், சென்னை மானிடவியல் பிரிவிலும், மதுரை அருங்காட்சியகக் காப்பாட்சியராகவும் பணியாற்றி சென்னைப் பல்கலைக் கழகத்திலும், மதுரை காமராசர் பல்கலைக் கழகத்திலும் பகுதிநேர விரிவுரையாளராகப் பணி செய்தவர். சிறந்த அருங்காட்சியகக் காப்பாளர் மற்றும் ஆய்வாளர்.

இக்கையேடு பார்வையாளர்களுக்கும், ஆய்வாளர் களுக்கும், பயணிகளுக்கும் பயனுள்ள ஓர் நூலாக பயன்படும் என்று கருதுகிறேன்.

திருநெல்வேலி அருங்காட்சியகம் புதிய பரிமாணத்துடன் வீரபாண்டியகட்டபொம்மனின் தம்பி ஊமைத்துரையை ஆங்கிலேயர் விசாரணை செய்த வரலாற்றுமிக்க கட்டிடத்திற்கு விரைவில் மாற்றப்பட உள்ளது என்பதும் மகிழ்ச்சியைத் தருகின்றது.

10. 07. 1997 [கண். தீனதயாளன்]

# அரசு அருங்காட்சியகம்
# திருநெல்வேலி

திக்கெல்லாம் புகழுறும் திருநெல்வேலியில் பதியால் பன்னிரண்டாவது மாவட்ட அருங்காட்சியகம் 1992–ஆம் ஆண்டு டிசம்பர் திங்கள் 21–ஆம் நாள் தொடங்கப்பட்டது. இயற்கையன்னை இனிய கோலம் கொண்டு விளங்கும் இம்மாவட்டத்தில் அமைந்துள்ள பொதிகையிலே தவழ்ந்த குழவித்தென்றல் நெல்லையம்பதியிலே நடந்து உலாவக் கண்டு இன்புற்றார் திருஞானசம்பந்தர். இம்மாவட்டம் திருநெல்வேலி, பாளையங்கோட்டை, தென்காசி, செங்கோட்டை, அம்பாசமுத்திரம், நாங்குனேரி, இராதாபுரம் ஆகிய வட்டங்களைக் கொண்டது. 6,838 சதுர கிலோ மீட்டர் பரப்பளவு கொண்ட இம்மாவட்டத்தின் மக்கள்தொகை சுமார் 25,00,000

தாம்பரபரணி, மணிமுத்தாறு, சித்தாறு, கடனாநதி, ஜம்புநதி, பச்சையாறு ஆகிய ஆறுகள் இம்மாவட்டத்தின் வளம் கொழிக்கும் ஆறுகளாகும். ''பொன் திணிந்த புனல் பெருகும் பொருனை எனும் திருநதி'' என்று கம்பர் போற்றிப்புகழ்ந்தார். பசுஞ்சோலைக் கவின் காடுகள் உடுத்த ஏலக்காய் மலை, அகத்திய மலை, குற்றால மலை, பொதிகை மலை ஆகிய மலைகளும், வாணத்தீர்த்தம், கலியாணதீர்த்தம், அகத்தியதீர்த்தம், பாபநாசம் என்னும் அருவிகளும் இம்மாவட்டத்தின் எழிலுக்கு எழிலூட்டுவதுடன் எல்லாவகையான உயிரினங்களுக்கும், காணிக்கார், பழியர், காட்டுநாய்க்கர் போன்ற பழங்குடிகளுக்கும் புகலிடமாக விளங்குகின்றன. தண்ணறுச் சோலைகள் நிறைந்த மூன்றடைப்பு, கூத்தன்குளம், முண்டன்துறை மற்றும் களக்காடு, உயிரினங்களின் உறைவிடங்கள், பெருங்கற்கால நாகரிகத்தின் அரும்பொருட்களை அகழ்வாய்வில் அளித்திட்ட ஆதிச்சநல்லூரின் பெருமை தொல்பொருளியல் மற்றும் மானடவியல் வல்லுநர்களால் போற்றப்படுகின்றது. பாபநாசம் நீர்த் தேக்கமும், மணிமுத்தாறு நீர்த் தேக்கமும் நீர்வளத்திற்கு ஊன்றுகோலாகவும், மின் உற்பத்திக்கு வித்தாகவும் விளங்குகின்றன. சுண்ணாம்புக்கல், டோலமைட், ஜிப்சம், இல்மனைட், மாக்னடைட், மோனசைட், கிராபைட் ஆகியவை இம்மாவட்டத்தின் கனிமங்கள். தாழையூத்து சிமெண்ட் ஆலையும் பத்தமடை பாய்த் தொழிலும் இம்மாவட்டத்தின் தொழில் மணம் கமழச் செய்கின்றன.

சாலிப்பதியூர் என்று வழங்கப்பட்ட தென்பாண்டி நாடாகிய திருநெல்வேலியில் பாண்டிய மன்னர் கட்டியிருந்த கோட்டையின் குறிகள் பல இடங்களில் உள்ளன. அவற்றில் ஒன்று பொருநை ஆற்றின் கரையில் அமைந்த செப்பறை. இவ்விடத்தில் இன்று ''அழகிய கூத்தர் கோயில்'' ஒன்றே காணப்படுகின்றது. அக்கோயிலைச் சுற்றியுள்ள சிதைந்த மதில்களும், மேடுகளும், செப்பறையின் தொன்மைக்குச் சான்றுகள். நாயக்கர் மன்னர்களால் கட்டப்பட்ட பாளையங்கோட்டையிலுள்ளகோயிலும், முதலாம் இராஜேந்திர சோழனால் உருவாக்கப்பட்ட கங்கைகொண்டானும், வரலாற்றுச் சிறப்புவாய்ந்த இடங்கள். பொதிய மலைத் தலைவனாய் விளங்கிய ஆய் என்பவன் வறுமையால் வாடிவந்தவரைத் தாயினும் சாலப்பரிந்து ஆதரித்த பெருமையை புறநானூற்றால் அறியலாம்.

மலைவளம் படைத்த இப்பழம்பதியில் அமைந்துள்ள திருக்குற்றாலத்தில் கோலமாமயில் தோகை விரித்து ஆடும். தேனுண்ட வண்டுகள் தமிழ்ப் பாட்டிசைக்கும். மலையிலிருந்து விரைந்து வழிந்து இறங்கும் வெள்ளருவி வட்டச்சுனையில் வீழ்ந்துபொங்கும் பொழுது சிதறும் சிறு நீர்த்திவலைகள் பால் ஆவிபோல் பரந்து எழுந்து வரும். அவ்வருவியில் நீராடி இன்புற்ற மேலை நாட்டுப் பெரியார் கால்டுவெல் பாதிரியார் ''இந்நானிலத்தில் உள்ள நன்னீர் அருவிகளுள் தலை சிறந்தது குற்றால அருவியே'' என்று புகழ்ந்துரைத்தார்.

திருக்குற்றாலத்தின் அருகே வடநாட்டுக் காசிக்கு நிகரான தென் காசியில் பதினைந்தாம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் ஆட்சிபுரிந்த பராக்கிரமபாண்டியனால் தென்காசி கோயில் கட்டப்பட்டதென்று சாசனம் ஒன்றின் வாயிலாக அறிகிறோம். அதிவீரராம பாண்டியன் தென்காசியிலிருந்து நைடதம் முதலிய நயஞ்சான்ற தமிழ் நூல்களை இயற்றினார். திருக்குற்றாலத்திற்கு அருகாமையில் உள்ள மேலகரம் எனப்படும் ஊரில் பிறந்து கவிதைபாடும் திறமைபெற்றார் திரிகூடராசப்பக்கவிராயர். இவர் இயற்றிய குற்றாலக் குறவஞ்சி நாடகத்தை நற்றமிழ் உலகம் புகழ்ந்து பாராட்டுகின்றது. மகாகவி சுப்ரமணிய பாரதி கல்வி பயின்ற புகழையும், தென்னிந்தியாவின் ஆக்ஸ்போர்டு என்று அழைக்கப்படும் பாளையங்கோட்டையில் அமைந்த பெருமையையும் கொண்டது இம்மாவட்டம்.

குறிஞ்சி வளம்வாய்ந்த இம்மாவட்டத்தில் காந்திமதி நெல்லையப்பர் கோயில், சாலைக்குமாரசாமி கோயில், கிருஷ்ணாபுரம்

திருவேங்கடநாதர் கோயில் அம்பாசமுத்திரம் தோரணமுருகன் கோயில், மன்னார் கோயில் எனும் இராஜேந்திர விண்னகரம், பைம்பொழில் எனப்படும் பம்புளியில் உள்ள திருமலைக்குன்றம் முருகன் கோயில், பொட்டல் புதூரில் 1674– ஆம் ஆண்டு கட்டப்பட்ட மசூதி, உவரி அந்தோணியார் கோயில் ஆகியவை பல்வேறு சமயத்தார்க்கும் உவப்பு ஊட்டுவன. திருக்குறளுக்கு உரை எழுதிய பரிமேலழகர், இரட்சணிய யாத்ரீகம் இயற்றிய கிருஷ்ணப்பிள்ளை, இலக்கியமேதை இரசிகமணி டி.கே. சிதம்பரநாத முதலியார், இசைமேதை எஸ். ஜி. கிட்டப்பா, வீரன் வாஞ்சிநாதன், வீரன் அழகு முத்துக்கோன் [எட்டயபுரம்] ஆகியோர் இம்மாவட்டத்தின் ஒளி விளக்குகள்.

இவ்வளவு பெருமைமிக்க திருநெல்வேலிச் சீமையில் அணிசேர்க்க வந்திருக்கும் இவ்வருங்காட்சியகத்தின் காட்சிக் கூடத்தில் உள்ள கலைப் பொருட்கள் பற்றியும் இயற்கைவளம் பற்றியும் விளக்கமாக அறிந்து கொள்வோம்.

## அருங்காட்சியகம்:

அருங்காட்சியகம் இதை ஆங்கிலத்தில் மியூசியம் என்பர். ‘மீசியோன்’ என்பது கிரேக்க மொழியில் கல்வி கற்கும் மையம் என்றும் கோயில் என்றும் கிரேக்க புராண மரபில் ஒன்பது கலைத் தேவதைகள் குடியிருககும் இடம் என்னும் பொருளில் இருந்து பெயர் வந்துள்ளது. ஆழ்ந்து ஆராய்ந்து நோக்கும் மையம் என்றும் பொருள்படும். அருங்காட்சியகம் என்பது கலை, அறிவியல், பண்பாடு, நாகரீக மையமாகும். கல்விக்கும் ஆய்வுக்கும் மிகவும் உதவக்கூடிய அரிய சான்றுகளைத் தன்னகத்தே கொண்டுள்ளன.

இந்தியாவின் மிப்பழமையான அருங்காட்சியகம் கல்கத்தாவில் உள்ள இந்திய அருங்காட்சியகமாகும். தமிழ்நாட்டில் உள்ள சென்னை அருங்காட்சியகம் இதனை அடுத்து இரண்டாவது அருங்காட்சியகமாகத் திகழ்கின்றது. மாவட்டந்தோறும் அருங்காட்சியகங்கள் தொடங்கப்பட வேண்டும் எனும் தமிழக அரசின் எண்ணப்படி திருநெல்வேலி மாவட்ட அருங்காட்சியகம் 1992–ம் ஆண்டு டிசம்பர் 21–ஆம் நாள் தொடங்கப்பட்டது. இந்த அருங்காட்சியகம் பல நோக்கு அருங்காட்சியகம் ஆகும்.

கல்லில் மனிதன் படைத்த கலைக் கருவூலங்களும்,

செப்புத் திருமேனிகளும், மரத் திருமேனிகளும், ஓவியங்கள், பழைய புதிய கற்காலக் கருவிகள், இரும்பு ஆயுதங்கள், துப்பாக்கி வகைகள், மண் பானைகள், நாணயங்கள், கல்வெட்டுகள், வீரக்கற்கள், கல்மாறிகள், பழங்குடிகளின் பண்பாட்டுப் பொருட்கள், சுவடிகள், அற்றுப்போன பிராணிகளின் மாதிரிகள், பறவைகள், விலங்குகள், மீன் வகைகள், தாவர வகைகள்கடல் பொருட்கள் எனப் பிரித்து அவற்றின் இயற்கைச் சூழலில் காட்சிக்கு உள்ளன.

## திருநெல்வேலி அறிமுகக்கூடம்:

திருநெல்வேலியின் கலை மற்றும் நாகரீக அம்சங்களை எடுத்தியம்பும் முகமாக நெல்லை காந்தி மதியம்மன் திருக்கோயில், அதன் எழில்மிகு கோபுரங்களும், சிற்பங்களும் இசைத் தூண்களும், நாயக்கர் கால கலைக் கோயிலான கிருட்டிணாபுரக் கோயிலும் அவற்றின் தூண் சிற்பங்களும், ஆடல் அரங்கமும், திருவாலீஸ்வரம்–சோழர்களின் கற்கோயில், கழுகுமலைக் கற்றளி – பல்லவர்களின் கற்றளிக்கு இணையாகத் தென்மாவட்டத்தில் முற்கால பாண்டியர் கி. பி. '8 'ஆம் நூற்றாண்டில் மலையை வெட்டிக்காட்டிய எழில் கோயிலும் சிற்பங்களும், அங்குள்ள முருகன் குகைக் கோயில், கழுகுமலை சமண தீர்த்தங்கரர்கள், திருப்புடைமருதூர், மற்றும் இடைக்கால் ஓவியங்களின் வண்ணப்படங்கள், நெல்லை மாவட்ட குகைக் கோயில்கள், சமணப் படுக்கைகள், குற்றால அருவிகள், சிமெண்ட் ஆலை, பள்ளிவாசல்கள், சங்கரன் கோயில் கோபுரம், அய்யனார் கோயில், சுடுமண் குதிரைகள், கட்டபொம்மன் கோட்டை, எட்டையபுரம் ஜமீன் அரண்மனை, சேரன்மாதேவி கோயில், தாமிர பரணி ஆற்றின் அழகு, கிருஸ்த்துவ ஆலயங்கள், கடலோர அழகு என மாவட்டத்தின் சிறப்பை நம் முன் காட்டும் பலகனியாக அறிமுகக்கூடம் அமைந்துள்ளது. மின்னொளியுடன் மாவட்ட வரைபடம் நமக்கு எல்லையைக் காட்டுகின்றது.

## கற்சிற்பத் தோட்டம்:

அருங்காட்சியகத்தினுள் நம்மை வரவேற்கும் முகமாக இம்மாவட்டத்தில் கிடைத்த சமணர் திருமேனிகளும், திருமால், காளி, துர்க்கை, கருப்பசாமி, வீரர்களின் நினைவுக் கற்கள், கல்வெட்டுகள் என பரவலாகவும் மிக நேர்த்தியாகவும் பீடங்களின் மேல் எழிலாக அமைந்துள்ளன.

## பாண்டிய நாட்டில் சமண சமயம்:

தமிழ்நாட்டில் சமண சமயம் தொடர்பான சான்றுகள் கி.மு. இரண்டாம் நூற்றாண்டிலிருந்து காணப்படுவதால் அந்நூற்றாண்டிலோ, சிறிது முந்தியோ சமணம் தமிழ்நாட்டில் காலூன்றியுள்ளது. மதுரைக்கு அருகில் உள்ள மீனாட்சிபுரம், அழகர்கோயில், கீழக்குயில்குடி ஆகிய இடங்களில் உள்ள தமிழ் பிராமிக்கல்வெட்டுகள் இதனை உறுதிப்படுத்துகின்றன.. தமிழ் நாட்டுச் சமணச் சமயம் தொடர்பாக எழுதிய பலர் சந்திர குப்த மௌரியர் காலத்தில் கருநாடகத்திலுள்ள சிரவணபௌகோளா வந்த முனிவர் பத்திரபாகுவின் சீடரால் தமிழ்நாட்டில் சமணம் பரப்பப்பட்டது என்றும் இது கொங்கு நாட்டு வழியாகவும் தொண்டை நாட்டு வழியாகவும் தமிழ்நாட்டில் பிற பகுதிகளுக்குப் பரவியது என்றும் கூறுவர். கருநாடகத்தைக் காட்டிலும் சமணம் பற்றிய மிகப்பழமையான சான்றுகள் தமிழ்நாட்டில் குறிப்பாக பாண்டிய நாட்டில் கிடைக்கின்றன.

பூலாங்குறிச்சியில் காணப்படும் சமணர் பற்றிய புதிய கல்வெட்டுச் சான்று இதுவரை சிம்மவர்மன் பள்ளிச்சந்தம் அளித்ததைத் தெரிவிக்கும் பள்ளன்கோவில் செப்பேட்டிற்கும் [கி. பி. 560] தமிழ்நாட்டில் எழுதப்பெற்ற ''லோகவிபாகம்'' [கி.பி. 455] என்ற சமண நூலிற்கும் முந்திய காலத்தினைச் சார்ந்ததாகும். நெல்லை அருகில் மறுகால் தலையில் சமணப்பள்ளி இருந்துள்ளது. இது கி. பி. 200 முதல் கி. பி. 400 க்குள் செயல்பட்டதை இங்குள்ள பிராமி எழுத்துக்கள் மூலம் அறியலாம்.

மதுரையிலிருந்து அருப்புக்கோட்டை வழியாக தூத்துக்குடி திருநெல்வேலி வரும் பெருவழிச்சாலை ஓரங்களில் உள்ள கிராமங்கள் முழுவதும் சமணம் பரவிட வணிகர் குழுக்கள் அவ்வழியே பயணம் செய்யும் போது உதவி இருக்கின்றனர். அதனால் குளத்தூர், விளாத்திகுளம், முறைமன், ஆழ்வார்திருநகரி, ஆதிச்சநல்லூர், மறுகால்தலை போன்ற ஊர்களில் தீர்த்தங்கரர், மகாவீரரின் எழில்மிகு சிற்பங்கள் அமைக்கப்பட்டு வணங்கப்பட்டு வந்துள்ளன. இன்றும் குளத்தூரில் சமணச்சாமி என்று மகாவீரரை வணங்கி வருகின்றனர். பாண்டியநாட்டில் சமணம் பறவி, சாதி ஆகியவற்றைக் கடந்து எல்லாத் தரத்து மக்களிடையேயும் பரவியிருந்தது என்பதற்குக் கழுகுமலை சமணப்பள்ளியிலுள்ள நூற்றுக்கும் மேற்பட்ட கல்வெட்டுக்களே சான்று. நாட்டின் பல பகுதிகளிலிருந்து நாட்டாரும், ஊராரும், நகரத்தாரும்,

பிரம்மதேயத்தாரும் இக்காலத்தில் சமண சமயத்திற்கு ஆதரவு அளித்திருக்கின்றனர். பாண்டிய நாட்டில் காணப்படும் சமண இருக்கைகளையும் கல்வெட்டுக்களையும் சமணர் சிற்பங்களையும் கொண்டு நோக்கும் போது வணிகரைக் காட்டிலும் இடையர், கொல்லர், தச்சர் ஆகிய பிரிவினர் நிறைந்த ஊர்ப்பகுதியினரே சமணத்திற்கு ஆதரவு அளித்துள்ளனர்.

சமண சமயத்தினைச் சார்ந்தவர்கள் தமிழ் நாட்டில் எழுந்த வைதீக மதத்தின் அலைக்கு எதிராகத் தங்கள் பழைய போக்கினை மாற்றிக் கொண்டு சமணம் நிலைபெறப் போராடி இருக்கிறார்கள். பல இடங்களில் சமண சமயப் பள்ளிகளைத் தோற்றுவித்து, தங்கள் சித்தாந்தத்தைப் பரப்பியிருக்கிறார்கள். அச்சணந்தி போன்ற சமண நெறியாளர்கள் தமிழ்நாடு முழுவதும் அலைந்து பல இடங்களில் சமண உருவங்களைத் தோற்றுவித்து சமணத்தின் வாழ்விற்கு உழைத்து இருக்கிறார்கள்.

சமண சிற்பங்கள் மிக நேர்த்தியாக அழகுடன் அமைக்கப்பட்டுள்ளன. மகாவீரர் அமர்ந்த நிலையில் இருபுறமும் இருவர் கரண்ட மகுடத்துடன் சாமரம் வீசும் நிலையில் பின்புறம் நீண்டு வளைந்த வேலைப்பாடுள்ள தலையணை தாங்கி நிற்கும் நிலையில் நிமிர்ந்து தியானநிலையில் அமர்ந்துள்ளமகாவீரர் எழில் சிற்பங்கள் சிற்பப் பூங்காவில் காட்சி தருகின்றன.

## மகாவீரர்:

ஆழ்வார் திருநகரில் புதையலாகக் கிடைத்த மகாவீரரின் சிற்பம் இந்தச் சமணத் திருமேனி குறிப்பிடத் தக்கதாகும். அழகு வாய்ந்த சிம்மம் தாங்கி நிற்கும் பீடத்துடன் காட்சியளிக்கும் தீர்த்தங்கருடைய உருவும் தனித்திருந்து வாழும் மெய்த்தவமியற்றுவோர்க்குரிய இயல்புடன் காட்சி அளிக்கின்றது. இத்திருமேனியின் வடிவமைப்பும் கலைத் தன்மையும் தமிழ்நாட்டுப் பாணியில் அமைந்தவையல்ல. வேற்றுப் பகுதியைச் சார்ந்ததாக உள்ளது. பெரும்பாலும் சாளுக்கியப் பகுதியிலிருந்து கொண்டுவரப்பட்டிருக்கலாம். சாளுக்கிய கலைப்பாணியில் செல்வாக்கு இத்திருமேனியில் படிந்திருப்பதைப் பார்க்க முடிகின்றது. கல்வெட்டுக்கள் தீர்த்தங்கரர் திருவுருவங்களை ''அணியாத அழகியார்'' என்று குறிப்பிடும் இந்த வாசகம் ஆழ்வார்திருநகரி தீர்த்தங்கரின் திருவுருவத்தைப் பார்க்கும் போதெல்லாம் புலப்படும்.

மகாவீரர் தம் எழில் சிற்பத்தில் தலைக்கு மேலாக

முக்குடை பொறிக்கப்பட்டு உள்ளது. அதன் பின்புறம் சுழன்று சுழன்று ஐந்து மலர் கொத்துக்கள் மலர்ந்த நிலையிலும் மொட்டு நிலையிலும் உள்ளன. இவரது பீடத்தினை சிம்ம உருவங்கள் தாங்கி நிற்பது போன்றுள்ளன. பீடத்தின்மேல் பக்கவாட்டில் இரு சிம்ம உருவங்கள் முழுமையாக இருபுறமும் திரும்பி நிற்பது போன்று பொறிக்கப்பட்டுள்ளன.

இத்திருமேனி கி. பி. 8 ஆம் நூற்றாண்டின் கலையம்சத்தை தாங்கி நிற்கின்றது. இந்த மகாவீரர் சிற்பத்தைத் தொடர்ந்து விளாத்திகுளம் மந்திக்குளம் கிராமத்தில் கிடைத்த மகாவீரரின் அமர்நிலைச்சிற்பம் இதே காலத்தைச் சார்ந்ததாகும். இந்த பகுதியில் ஓட்டப்பிடாரம் அருகில் முறைமன் கிராமத்தில் கிடைத்த மகாவீரரின் சிற்பத்தின் தலை உடைக்கப்பட்டுள்ளது. அக்காலகட்டத்தில் ஏற்பட்ட மதக்கசப்பு காரணமாக இச்சிலை உடைக்கப்பட்டு இருக்கலாம். இதனருகில் இராமநாதபுரம் மாவட்டம் உத்திரகோசமங்கையில் கிடைத்த மகாவீரரின் கலையழகுடனும், மெருகு வேலைப்பாடுகளுடனும் அமர்ந்த நிலையிலுள்ள மகாவீரர் சிற்பம் மிகவும் தெளிவாகப் படைக்கப்பட்டுள்ளது.

நெல்லை அருகில் மிகப்பழமையான இரும்புக்கால நாகரீகச் சான்றுகள் கிடைத்துள்ள ஆதிச்சநல்லூர் அருகேயுள்ள மகாவீரரும், பேரூரணி சிதம்பரனார் மாவட்டம் குளத்தூர் கிராமத்தில் சமணச்சாமி என வணங்கப்படும் எழில் சிற்பங்களும் இந்த அருங்காட்சியகத்தில் காட்சி தர உள்ளன.

சிதம்பரனார் மாவட்டம் கோவில்பட்டி அருகே உள்ள கழுகுமலையில் கி.பி. 8 – ஆம் நூற்றாண்டில் அமைக்கப்பட்ட சமணப்பள்ளியில் சமணத் தீர்த்தங்கரர்களின் புடைப்புச் சிற்பங்களும், மகாவீரரின் நுண்கலை வேலைப்பாடுகளுடன் கூடிய புடைப்புச் சிற்பங்களும் யக்ஷியின் திருவுருவமும் கலை நுட்பத்துடன் கூடியவை. திருவாச்சியுடன் காணப்படும் யக்ஷியின் கையில் மாம்பழம் உள்ளது. ஒரு புறத்தில் குழந்தையுண்டு. இந்த சமணத் திருவுருவங்களின் புகைப்படங்கள் மூலம் நமக்கு காட்சி தருகின்றன. மாவட்ட அறிமுகக் கூடத்தில்.

## நடுகற்கள்:

பாண்டியர் கால நடுகற்கள் மிகக்குறைந்த எண்ணிக்கையிலே கிடைத்துள்ளன. சிதம்பரனார் மாவட்டம் கோவில்பட்டி

வட்டம் இளவேலங்கால் என்னும் ஊரில் பத்து நடுகற்கள் கிடைத்துள்ளன. இவை பத்தும் பிற்காலப் பாண்டியரின் நடுகற்களாகும். பதினாறாம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகும். பிற்காலப் பாண்டியர்களுக்கும் மதுரை நாயக்கருக்கும் இடையே ஏற்பட்ட ஓர் திடீர்த் தாக்குதலில் வீரமரணம் அடைந்த பாண்டிய வீரர்கள் பத்துப் பேரின் நினைவாக எடுக்கப்பட்ட நடுகற்களாகும். இவர்கள் கொண்டையங்கோட்டை மறவர் இனத்தவர்.

நடுகற்கள் தமிழில் பொறிக்கப்பட்டுள்ளன. ஒன்பது நடுகற்களில் படைப்புச் சிற்பங்கள் வடிக்கப்பட்டுள்ளன. ஒரு நடுக்கல்லில் படைப்புச் சிற்பமும் இல்லை. எழுத்தும் தெளிவாக இல்லை.

பிற்காலப் பாண்டியர்களில் ஒருவரான சடாவர்மன் குலசேகரனின் காலத்தவை. கி. பி. 1547– ஆம் ஆண்டு பங்குனித் திங்கள் 22–ஆம் நாள் எடுப்பிக்கப்பட்டவை. இளவேலங்காள் என்னுமிடத்தில் திருநெல்வேலிப் பெருமாள் என்னும் வெட்டும் பெருமாளையும் அவனது படையினையும், வெங்கலராசனும் அவனது வடுகர் படை [நாயக்கர் படை] யும் திடீரெனத் தாக்கிக்கொண்டனர். இத்திடீர்த் தாக்குதலில், பாண்டியர் படையைச் சார்ந்த பத்துப் பேர் கொல்லப்பட்டனர். இவ்வீரர்களின் நினைவாக அவர்களுடைய வீரமும், புகழும் பெயரும் பொறிக்கப்பட்டு எடுக்கப்பட்ட நடுக்கற்கள் பத்தும் சிற்பப்பூங்காவில் எழிலுடன் காட்சி தருகின்றன.

முதல் நடுகல் கொண்டையங்கோட்டை மறவச்சிறுவன் [இளைஞன்] பூவாசி மழவராயன் சிறுவன் என வீரனின் பெயரைக் கூறுகின்றது. இரண்டாம் நடுகல் 'அஞ்சாத கண்டப்பேரரையன்' என்பவன் பெயரையும், அடுத்துள்ளது 'அஞ்சாதகண்ட பேரரையன் மகன் சிவனை மறவாத தேவர் பெருமாக்குட்டி பச்சன்' எனக் குறிக்கப் பெற்றுள்ளான். சிவபக்தன் என்பதை சிவனை மறவாத தேவர் எனக் குறிப்பிட்டுள்ளான். நான்காவது நினைவுக்கல்லில் '' விசயாலய தேவன் மகன் சீவலவன் வென்று முடிகொண்டான் விசயாலய தேவன்'' என்று புகழ்ந்து பேசப்பட்டுள்ளான். இவன் பெயருக்கு முன்னால் கிரிவல்லபன், வென்று முடிகொண்டான் என்ற சிறப்புப் பட்டங்களைக் கொண்டு விளங்குகிறான். 'திண்ணையன்' என்றும் கூறப்படுகிறான். திண்ணையன் என்பது வலிமையுள்ளவன், மனோதைரியமுள்ளவன் என்பதைக் குறிக்கும்.

அடுத்து ஐந்தாவதாகக் காட்சி தரும் நடுகல் ''செல்லப்

பெருமான் ராமக்குட்டி''க்காக நிறுவப்பட்டது. இளவேலங்கால் அரசு நிலை நின்ற பாண்டியத் தேவர் மகன் செல்லப் பெருமான் இராமக்குட்டி என்று குறிப்பிட்டுள்ளான். எதிரியின் குதிரையைக் குத்திவிட்டு ஊடுருவிச் சென்ற போது இவன் எதிரியால் கொல்லப்பட்டான். ஆறாவது நடுகல் பைந்தலை தொண்டைமானுக்குப் பிள்ளையின் மகன் 'ராஜ வேங்கை' எனக் குறிப்பிட்டுள்ளான். தொண்டைமான் எனும் பட்டத்தைக் கொண்ட குடும்பத்தைச் சார்ந்தவன். இராஜ வேங்கை எனும் வீரப் பெயர் கொண்டவன்.

ஏழாவது நடுக்கல்லில் ''மாகந்தலை பிரியா தான் தொண்டைமான் மகன் பிழை பொறுத்தான்'' என்று குறிக்கப்பட்டுள்ளான். 'பிழை பொறுத்தான்' என்னும் இலக்கிய நயமிக்க பெயரைக் கொண்டவனின் தந்தை பெயரும் இலக்கிய நயமிக்க பெயராகவே இருக்கிறது. தந்தை பெயர் 'பாகந்தலைபிரியான்' என்பது எட்டாவது நடுக்கல்லில் ''இளவேலங்காய் அஞ்சாதான் இராமவெட்டி'' எனக் குறிப்பிட்டுள்ளான். அஞ்சாதான் இவனது அஞ்சாமையையும், தைரியத்தையும் எடுத்துக் கூறுகின்றது. ஒன்பதாவது நடுக்கல்லில் 'இளவேலங்காய் ஆண்டார் மகன் ஆள்புறத்திருவன்' என்று குறிப்பிட்டுள்ளான். இவன் ஒரு மாவீரன். தந்தை பெயர் ஆண்டார். 'ஆள்புலித்தேவன் எனும் புதுமை பெயர் கொண்டவன்.

பத்து நடு கற்களிலும் பாண்டிய வீரர்களின் வீரமும் பெயரும், மற்றும் பிற செய்திகளும் பொறிக்கப்பட்டுள்ளன. பிற்காலப் பாண்டியர் காலத்திலும் வீரக்கல் நடும் பழக்கம் தொடர்ந்து இருந்தது என்பது இதன் மூலம் விளங்குகின்றது.

இந்த எழில் சிற்பங்களுடன் சிதம்பரனார் மாவட்டம் குரங்கனியில் கிடைத்த கருடத்தாழ்வார் திருமாலின் வாகனம், வணங்கிய நிலையில் உள்ளது. இது கி. பி. 17–ஆம் நூற்றாண்டின் கலையம்சம் பொருந்தியது. பல கரங்களுடன் காளி. இது ஓட்டப்பிடாரம் அருகே பசுவந்தனையில் கிடைத்தது. நின்ற நிலையில் சங்கு சக்கரம் ஏந்தியுள்ள திருமால் 19–ஆம நூற்றாண்டின் கலைச்சிற்பம். இதுவும் முறைமனில் கிடைத்தது. மற்றும் அய்யனார் புசுகலா, பூர்ணிமாவுடனும், கருப்பசாமி, தேவி, துவாரபாலகர் சிற்பங்களும் காட்சிக்கு உள்ளன.

## துர்க்கை:

காமராசர் மாவட்டம் திருவில்லிப்புத்தூரில் கி.பி. 18 -ஆம் நூற்றாண்டின் கலையம்சத்துடன் வடிக்கப்பட்ட சிற்பமாகும். எண்கரங்களில் மேலிரு கரங்களிலும் வலது கரம் பூச்செண்டும் இடது கரம் நாகத்தைப் பிடித்த நிலையிலும் அடுத்துள்ள இரு கரங்களில் ஒன்று தாமரை மொட்டையும் இடது கரம் உடைந்த நிலையிலும் அடுத்துள்ள இரண்டு கரங்கள் கேடயம் வாள் ஏந்தியும், கீழ் இரு கரங்களில் வலது கரம் கபாலமும் இடது கரம் மலர் காட்டியும் காணப்படுகின்றது. இடது காலை மடக்கியும் வலதுகால் மகிசாசுரனின் எருமைத்தலையில் வைத்த நிலையிலும் உளளது. தலையில் கிரீடமும் அதன் பின்புறம் தீ ஜுவாலைகளும் உள்ளன.

## படிமக்கூடம்:

இன்று உயிர்பெற்று வாழும் கலைகளில் படிமக்கலை ஒன்று. இன்றும் தஞ்சாவூர், கும்பகோணம், சுவாமிமலை போன்ற ஊர்களில் கலை வல்லுனர்கள் பல எழில்படிமங்களைப் படைத்து வருகின்றனர். படிமங்களை உருவாக்குவதில் இரண்டு முறைகள் உள்ளன. ஒன்று திடமான படிமம் மற்றது உள்ளீடுகளுடன் கூடிய படிமம். தேன் மெழுகையும் குங்கிலியத்தையும் சரியான விகிதத்தில் கலந்து சிறிதளவு எண்ணைய் கலந்து ஸ்பதியின் எண்ணப்படி தேவையான மெழுகு உருவம் தயாராகும். இதைத் தயார் செய்யும் போது உருவ அமைப்பும், நுட்பக்கலையும், அணிகலங்களும் அமைப்பும் மிக நுண்ணிய முறையில் கவனிக்கப்படும். கைகள் மற்றும் சில பகுதிகள் உடைந்து விடாமல் இருக்க சில தாங்கும் இணைப்புகள் மெழுகிலேயே அமைக்கப்படும். மெழுகு உருவின்மேல் தலையில் புனல் போன்ற அமைப்பும், அடிப்பகுதியில் உருகிய மெழுகு வெளியேறவும் அமைப்பு ஏற்படுத்தப்படும்.

அடுத்து மெழுகு உருவின் மீது புற்றுமண், உம்மி, மாட்டுச்சானம், கலந்து கரைசலை பலமுறை தொட்டுப் பூச வேண்டும். இதனால் மெழுகு உருவின் மீது கரைசல் காய்ந்து படிந்து விடும். மெழுகு உருவின் எப்பகுதியும் தெரியாமல் ஸ்தபதிபார்த்துக் கொள்வார். இப்போது மண்ணால் மூடிய உருவம் வெயிலிலும் நிழலிலும் காய வைத்து கெட்டியாக்கப்படும். இந்த நேரம் மெழுகு வெப்பத்தால் உருகாமலும், மேல் மண் மறைப்பு உடைந்து விடாமலும் கவனம் எடுத்துக் கொள்ள வேண்டும். சில நாட்களில் மண்ணால் மூடிய மெழுகு உருவம் உருக்கிடத் தயாராகிவிடும்.

மிகவும் புனிதமாகக் கருதப்படும் ஐந்து உலோகங்களான செம்பு, வெள்ளி, தங்கம், பித்தளை, ஈயம் ஆகியவற்றின் கலவையை பஞ்சலோகம் என்பர். டின், ஈயம், ஆர்சனிக், இரும்பு ஆகியவை மிகக் குறைந்த அளவில் காணப்படுவதாக அறிவியல் ஆய்வு தெரிவிக்கிறது. ஈயம் ஸ்தபதியின் நுண்ணிய வேலைப்பாட்டுக்கு உதவும். தங்கம் வெள்ளி அபூர்வமாகவே காணப்படும்.

தற்போது மண்ணினுள் காணப்படும் மெழுகு உருவம் உலையில் வைத்து எருவின் உதவியுடன் சூடாக்கப்படும். வெப்பத்தால் மெழுகு வெளியேறும். புனல் போன்ற அமைப்பின் வழியாக வெப்பம் செலுத்தப்படுவதால் உள்ளிருக்கும் மெழுகு கீழ்வாயில் வழியாக வெளியேறிவிடும். காற்றுமுட்டைகளும் வெளியேறும்.

உலோகக் கலவை உருக்கப்பட்டு மண் உருவினுள் ஊற்றப்படும். எந்தப் பகுதியிலும் வெளி ஏற்படாதவாறு கவனமாக நிரப்பப்படும். அதன்பின் இது குளிரூட்டப்படும். மண் உருவம் உடைக்கப்பட்டு உலோக உருவம் வெளியே எடுக்கப்படும். ஸ்தபதியின் சில நுண்ணிய வேலைப்பாடுகள் தமது உளியின் மூலம் செய்து மெருகூட்டுவார். ஸ்தபதியின் திறனால் மிக அழகிய செப்புத் திருமேனி உருவாகி விடும்.

உள்ளீடு படிமங்கள் மண்ணில் செய்யப்பட்டு மெழுகை உருக்கி பூசப்படும். அதன்பின் மண் கலவையில் மெழுகு அமைப்பின் மீது பூசப்படும். பின்னர் மெழுகை உருக்கி எடுத்து விட்டு காய வைத்து உலோகக் கலவையை ஊற்றுவதன் மூலம் உள்ளீடு படிமங்கள் தயாராகும்.

தென்னிந்தியாவில் கிடைத்த படிமங்கள் யாவும் திடமான படிமங்களின் வகையைச் சார்ந்தவையே. தமிழகத்தில் கிடைத்த மிகப்பழமையான படிமம் என்பது 2000 ஆண்டுகளுக்கு முன்னர் ஆதிச்சநல்லூர் இரும்புக்கால புதைமிடத்தில் கிடைத்த தாயத் தெய்வத்தின் படிமமே ஆகும். [இதைச் சிலர் கி. மு. 7– ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது என்பர்] கி. பி. 6–ஆம் நூற்றாண்டின் இறுதியிலும் 8 –ஆம் நூற்றாண்டின் ஆரம்பத்திலும் கோயிற்கலை வளர்ச்சி அடைய ஆரம்பித்தது. மகேந்திரவர்மனும், நரசிம்மவர்மனும் குடவரைக் கோயில்களை 75 புடைப்புச் சிற்பங்களுடன் அமைத்தனர். பல்லவர்களும், சோழர்களும், பாண்டியர்களும், அதன்பின் நாயக்க மன்னர்களும் படிமக் கலையில் புதுமை படைத்தாலும் சோழர்களின் படிமங்களே உலகப் புகழ் பெற்ற கலையம்சமாகக் கருதப்படுகின்றன.

கோயில்களில் கல்லில் செய்த உருவங்கள் நிலையாக அமைக்கப்பட்டன. தேர்த்திரு விழாக்களில் வெளியே ஊர்வலமாக எடுத்து செல்ல படிமங்கள் தயாரிக்கப்பட்டன. கோயில் கருவறையில் உள்ள கற்சிற்பங்களை ஸ்தானக மூர்த்தி [நிலையான மூர்த்தி] என்றும் அழைப்பர். ஊர்வலம் வரும் படிமங்களை உற்சவ மூர்த்தி என்றும் அழைப்பர்.

படிமங்களின் காலத்தினை கணக்கிட அதன் கலையம்சம், அணிகலன்கள், அமைப்பு தாங்கி நிற்கும் ஆயுதங்கள் போன்றவற்றை ஆய்வு செய்தே முடிவு செய்வர். பல்லவர் சோழ கால படிமங்கள் ஓர் உயர் தன்மையும், சிரிக்கும் முக அமைப்பும், அழகிய கண்களும், கன்னங்களும், தலையலங்காரமும் மற்றும் தலைக் கவசங்களும் தெளிவாகக் காணப்படும்.

நாயக்கர் காலப் படிமங்கள் உயிர்த் தன்மைக்குப் பதிலாக அதிகமான உடலமைப்பும், அணிகலங்களும், ஒரு வித உணர்வற்ற அமைப்பும் காணப்படும்.

புதைப் பொருட்கள் சட்டப்படியும், உரிமை கோரப்படாத பொருட்கள் சட்டப்படியும், நீதிமன்ற பறிமுதல் மூலமாகவும் செப்புத் திருமேனிகள் அரசு அருங்காட்சியகங்களுக்கு வந்து சேர்ந்துள்ளன. சைவ சமயப் படிமங்கள், வைணவ சமயப் படிமங்கள், புத்த சமணப் படிமங்கள், நாட்டுப்புறத் தெய்வங்களின் படிமங்கள் எனப் பலவகைப் படிமங்கள் கிடைத்துள்ளன.

## சோமாஸ்கந்தமூர்த்தி [சிவன் உமையுடன் கந்தன்]:

சிவபெருமான் உமையுடன் [பார்வதி] அமர்ந்த நிலையில் நடுவில் கந்தன் இரு கரங்களிலும் தாமரை மலரேந்தி நின்ற நிலையில் காணப்படும் திருமேனிகளை சோமாஸ்கந்தமூர்த்தி என்றழைப்பர. தமிழில் கந்தன் உமையுடன் சோமநாதர் என்பர். இரண்டாவது மகன் சுப்பிரமணியர் இங்கு கந்தர் என்றழைக்கப்படுகிறார். சிவபெருமான் ஒரு காலை மடக்கி மறுகாலைத் தொங்கவிட்ட நிலையில் நான்கு கரங்களில் மேல் இரு கரங்களில் மழுவும் மானும் ஏந்திய நிலையிலும் கீழ் இருக்கரங்களில் வலது கரம் அபய முத்திரையுடனும் இடது கரம் வரத முத்திரையுடனும் உள்ளது உடைந்தும் காணப்படுகிறது. சிவனின் தலையில் பிறைச்சந்திரனும், கங்கையும் காணப்படுகின்றன. ஜடாமகுடத்துடனும் கழுத்தில் ஆபரணங்களுடனும் கவிழ்ந்த தாமரை ஆசனத்தில் நிமிர்ந்தும் அமர்ந்துள்ளார்.

தேவி அமர்ந்த நிலையில் வலது காலை மடக்கி அமர்ந்து இடது காலைத் தொங்க விட்ட நிலையில் உள்ளார். தேவி வலது கரம் தாமரைமொட்டு ஏந்தியும் இடது கரம் வரத முத்திரையுடனும் தலையில் உயர்ந்த கரண்ட மகுடத்துடனும் உள்ளார். காது மடல்கள் தொங்கிய நிலையிலும் கணுக்கால் வரை ஆடையும், கழுத்தில் ஆபரணமும் தாங்கியுள்ளார்.

## காளி:

2 1/2 அடி உயரத்தில் கி. பி. 16–ஆம் நூற்றாண்டின் கலையம்சத்துடன் உள்ளது. நான்கு கரங்களுடன் நின்ற நிலையில், மேல் இரு கரங்களில் வலது கரம் உடுககை தாங்கியும் இடது மேல்கரம் உடைந்தும் கீழ் இரு கரங்களில் வலது கரம் உடைந்தும் கீழ்க்கரம் கபாலம் ஏந்தியும் உள்ளது. கண்கள் விரிந்தும் கோரைப் பற்களுடனும் ஜுவாலையுடன் உள்ள தலைமுடியில் நாகமும் சந்திரனும் காணப்படுகிறது. வலது காது தொங்கியும் இடது காதில் ஓலைக் கம்மலும் உள்ளன.

## கணேசர்:

இன்றைய தினம் கணேசர் இந்து சமயத்தின் மிக முக்கியமான கடவுளாகக் கருதப்படுகின்றார். புராணக்கதைகளில் இவரைப் பற்றி பலவிதமாகக் கூறினாலும் நாம் இவரை சிவன் பார்வதியின் மூத்த மகனாக ஏற்று கொண்டு விட்டோம். கணேசரை உலகில் பல நாடுகளில் அவர்களின் தெய்வமாக ஏற்று வணங்கிய சான்றுகள் உள்ளன. கணேசர் தம் தந்தத்தை முறித்துக் கொண்டதற்கு பல கதைகள் உள்ளன.

சிவனைக் காண வந்த பரசுராமரை [திருமால்] வாயிலில் இருந்த கணேசர் உள்ளே விட மறுத்ததால் கோபத்தில் தந்தத்தை வெட்டினார் என்பர். கஜமுக சூரனை அழித்து தந்தத்தை முறித்தெறிந்து எலியாக மாற்றி தம் வாகனமாக்கினார் என்பர். பிரம்மனின் ஆலோசனைப்படி வியாச முனிவருக்கு மகாபாரதம் எழுத எழுத்தராக இருந்த போது தமது தந்தத்தை முறித்து எழுதினார் என்பர். இது தமிழகத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்ட கதை.

நின்ற நிலையில் உள்ள இந்த கணேசரின் படிமம் நான்கு கரங்களுடன் நிமிர்ந்து நிற்கின்றது. மேல் இரு கரங்களுள் இடது கரம் பாசக் கயிற்றைத் தாங்கி நிற்கின்றது. மேல் வலது கரம்

உடைந்துள்ளது. கீழ் இரு கரங்களில் வலது கரம் பழம் ஏந்ியும் இடது கரம் முறிந்த தந்தத்துடன் காணப்படுகிறது. இந்தப்பிள்ளையார் கரத்தில்தான் தந்தம் மாற்றி வைக்கப்பட்டுள்ளது. மழு ஏந்திய கரம் உடைந்துள்ளது. சுற்றிலும் எரியும் ஜுவாலையுடன் திருவாச்சியும் தாமரை கவிழ்ந்த பீடமும் உள்ளது. தலையில் கரண்ட மகுடம். இது நெல்லை மாவட்டம் நங்கை மொழியில் கிடைத்த கி. பி. 15 –ஆம் நூற்றாண்டின் திருமேனியாகும்.

## சுப்பிரமணியர்:

நின்ற நிலையில் உள்ள சுப்பிரமணியர் தம் மயில் வாகனத்தடன் காட்சி தருகிறார். சிவபெருமானின் இரண்டாவது மகன் தென்னிந்தியாவில் புகழ் பெற்ற தெய்வம். இவரை கார்த்திகேயா, சண்முகா, சரவணபவா, கந்தர், குமரன் எனப் பலபெயர்களில் அழைப்பர். இவரைப் போர்க்கடவுள் எனவும் வானுலகின் தளபதி என்றும் அழைப்பர். இவர் எப்போதும் தம் தாய் கொடுத்த சக்தி ஆயுதத்துடன் காட்சி தருவார். இங்கு வேல் இல்லை. தாமரை கவிழ்ந்த பீடத்தில் இரு கரங்களுடன் காணப்படுகிறார். பித்தளையிலான இந்தச் சிலை மிகச் சிறியதாக 7'' உயரம் உள்ளது. கி. பி. 20–ஆம் நூற்றாண்டின் கலையம்சம் கொண்டது.

## சூலம்:

நங்கைமொழியில் கிடைத்த சூலத்தின் படிமம் ஒன்று தனியாக உள்ளது. திரிசூலம் ஆதிச்சநல்லூர் இரும்புக் கால நாகரீச் சின்னங்களுடன் கிடைத்துள்ளது. சிந்து வெளி நாகரீகத்தில் கிடைத்த அச்சுக்களில் பசுபதியுடன் திரிசூலமும் காணப்படுகின்றது. சிவன் சக்தியின் ஆயுதமான திரிசூலத்தை இப்பகுதி மக்கள் அறுவடைக் காலத்தில் வணங்குவது வழக்கம். சூலக்கல்லும் அதிகமாக இப்பகுதியில் கிடைத்துள்ளது. இதன் கலையம்சத்தைப் பார்க்கும் போது இந்த சூலம் கி. பி. 15–ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது எனலாம்.

## இராமர்:

நெல்லை மாவட்டம் நங்கை மொழியில் கிடைத்த சிறிய [7'' உயரம்] இராமனின் செப்புத்திருமேனி கவிழ்ந்த தாமரைப் பீடத்தில் நின்ற நிலையில் வலது கரம் அம்பை ஏந்தி நிற்கும் நிலையிலும் விரல்களை மடித்தும் இடது கரம் வில்லைப் பிடித்தும் நிற்கும் நிலையில்

கையைத் தூக்கியும் காணப்படுகின்றது. தலையில் கிரீட மகுடமும் பின்புறம் விரிந்த நிலையில் இருபுறமும் வளைந்த அமைப்புகள் உள்ளன. இதுவும் கி. பி. 15–ஆம் நூற்றாண்டின் திருமேனியாகும்.

## தேவி:

கவிழ்ந்த தாமரை மலரின் இரு கரங்களுடனும் கரண்ட மகுடத்துடனும் வலது கரம் தாமரை மொட்டை ஏந்தியும் இடது கரம் தொங்கும் நிலையில் லோலகஸ்த நிலையில் காணப்படுகின்றது. அரை அடி உயரம் உள்ள இத்தேவியும் நெல்லை மாவட்டம் நங்கை மொழியில் கிடைத்ததாகும். இதுவும் கி. பி. 15–ஆம் நூற்றாண்டின் திருமேனியாகும்.

## உலோகக் கலைப் பொருட்கள்:

காரைக்குடியில் வாழ்ந்த கலைப்பிரியர்கள் தங்கள் வீடுகளில் அன்றாடம் உபயோகித்து வரும் வெற்றிலைப் பெட்டி, பாக்கு வெட்டி, சுண்ணாம்புக்குவளை, எச்சில் பணிக்கம், தொங்கும் பண்முக விளக்குகள், நறுமணம் புகைக்கும் குடுவைகள், அளவை, கூஜா, கெண்டி, அலங்கார விளக்கு போன்றவற்றைக் கூட மயில் போலவும், விலங்கு போலவும், நாட்டிய மாதர் போலவும் மிக எழிலான வேலைப்பாடுகளுடனும், கலை ரசனையுடனும் உருவாக்கியுள்ள விதம் மிகவும் போற்றத்தக்கதாகும். இதுபோன்று சில உலோகக் கலை பொருட்களையும் சேகரித்து இங்கு காட்சிக்கு வைத்துள்ளோம்.

இத்துடன் மரப்பாச்சி பொம்மை அமைப்பில் பித்தளையிலான உருவங்களும் காட்சிக்கு உள்ளன. இவை கி. பி. 18–ஆம் நூற்றாண்டின் கலைப்பொருட்கள் ஆகும்.

செம்பிலும் பித்தளையிலும் மிகுந்த கலை நுணுக்கத்துடன் வீட்டு உபயோகப் பொருட்களை வடித்துள்ளனர்.

## கல்வெட்டுக் கூடம்:

தமிழ் நாட்டுக் கல்வெட்டுக்களை மத்திய தொல்லியல் துறையும், மாநில தொல்லியல் துறையும், சில அறிஞர் பெருமக்களும் மிகவும் சிரமம் எடுத்து படியெடுத்துப் படித்து பலவற்றை வெளியிட்டுள்ளனர். தமிழகத்தில் பிராமிக்குப்பின் வட்டெழுத்து, தமிழ்,

கிரந்த எழுத்துக்களின் வரி வடிவங்கள் உபயோகப் படுத்தப்பட்டுள்ளன. இதில் வட்டெழுத்து வரிவடிவமும், தமிழ் எழுத்து வரிவடிவமும் தமிழ்மொழியை எழுதவும்,கிரந்த எழுத்து வரிவடிவம் சமஸ்கிருத மொழியை எழுதவும் பயன்படுத்தப்பட்டன. தமிழகத்தில் கி. பி. 5–ஆம் நூற்றாண்டுக்கு முன்பாக பிராமிக் கல் வெட்டுக்கள் கிடைத்துள்ளன. இதன் தொடக்க காலம் கி. மு. மூன்றாம் நூற்றாண்டு எனலாம். இவைகள் மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்களிலேயே மிகுதியாகக் கிடைத்துள்ளன. திருநெல்வேலி மாவட்டம் சீவலப் பேரியில் உள்ள சமண குகைத்தளத்தில் பிராமி எழுத்துக்கள் பொறிக்கப்பட்டுள்ளன.

தமிழ் நாட்டில் கிடைத்த கல் வெட்டுக்கள் சிலவற்றை தொகுத்துள்ளனர். இவற்றில் மொத்தம் 176 கல்வெட்டுக்கள் கி. பி. 500 முதல் கி. பி. 985க்கு உட்ப்பட்டவை திருநெல்வேலியில் உள்ளன. இவற்றில் தமிழ் பிராமி வட்டெழுத்து ‘தமிழ்’ கிரந்தம் போன்றவை அடங்கும். கி. பி. 866 ல் [E. I. 9: 10] வரகுண பாண்டியன் திருநெல்வேலி அருகில் அம்பாசமுத்திரத்தில் கல்வெட்டுக்களைப் பொறித்துள்ளான். கி. பி. 966 ல் அம்பாசமுத்திரத்தில் சோழன் தலைகொண்ட வீரபாண்டியனின் கல்வெட்டு [கி. பி. 966 E. I. 25: 6] உள்ளது.

மேற்கண்ட சில கல் வெட்டுக்களில் மெய்யெழுத்துக்கள் புள்ளியுடன் காணப்படுகின்றன. அதே போன்று பூவாலங்குறிச்சி, மதுரை கல்வெட்டுக்களிலும் மற்றும் வேள்விக்குச் செப்பேட்டிலும் எகர, ஒகர குறில்களுக்கான உயிர் மெற் எழுத்துக்களைக் குறிக்கவும் புள்ளி இடப்பட்டுள்ளது. நேர் கோடுகளால் எழுதப்பட்ட எழுத்துக்ள் வளைந்த வடிவம் பெற ஆரம்பித்தன தமிழ் எழுத்து வரிவடிவம் போல் அல்லாது வட்டெழுத்தில் உயிர் மெய் எழுத்துக்களில் வரும் உயிர்க்குறிகளைக் குறிக்க ஒரே கோட்டால் எழுத்துடன் சேர்த்தே எழுதப்பட்டுள்ளதை ஆரம்பகாலத்தில் இருந்தே காணலாம். கி. பி. 8–ஆம் நூற்றாண்டிற்குப் பின் வட்டெழுத்துக்கள் மேலும் சாய்ந்த நிலையையும் சுழித்து எழுதப்படும் வடிவமும் பெற ஆரம்பித்தன. எழுத்துக்கள் இடச்சுற்று முறையில் எழுதப்பட்டன.

தமிழ் எழுத்துக்களின் வளர்ச்சியை அறிவதற்கு பல கல்வெட்டுக்கள் உதவுகின்றன. வல்லத்தில் கிடைத்த [S 112 : 72] கி. பி. 7–ஆம் நூற்றாண்டின் ஆரம்பக்காலக் கல்வெட்டு, பிராமிக்குப் பின் கிடைத்த கல்வெட்டாகும். கி. பி. 896 ல் உத்தமச் சோழன் வெளியிட்ட [S 113 : 128] செப்பேடு சென்னை அருங்காட்சிகத்தில் உள்ளது.

மேற்கண்ட செப்பேடும் கல்வெட்டும் நாநூறு ஆண்டு கால தமிழ் எழுத்துக்களின் வளர்ச்சியைக் காட்டுகின்றன.

கல்வெட்டுக் கூடத்தில் தமிழ் பிராமி, வட்டெழுத்து, கிரந்த எழுத்துக்களையும் அதற்கு இணையான தமிழ் எழுத்துக்களையும், குறியீட்டெழுத்து வடிவங்களையும், சில கல் வெட்டுக்களின் படிகளையும், செப்புப்பட்டயங்களின் புகைப்படங்கள் மற்றும் நகல்களையும் காட்சிக்கு வைத்துள்ளோம்.

திரு. மதிவாணன் சிந்துவெளி எழுத்துக்களை ஆய்வு செய்து திராவிடர் நாகரீகத்துடன் இணைத்து தமிழ் எழுத்துக்களின் வளர்ச்சியை மாற்றத்தை தம் நூலில் வெளியிட்டுளளார். அவற்றில் சிலவும் இங்கே காட்சி தருகின்றன.

## நாணயவியல் கூடம் :

நாணயங்கள் வரலாற்றுச் சான்றுகளுள் ஒன்று. தமிழகத்தின் வரலாற்றைத் தொகுப்பதற்கு நாணயங்கள் பெரும் உதவியாக இருந்தன . நாணயங்களின் மூலம் அந்நாட்டின் கலைத் திறன் எழுத்து முறை அரசர்களின் பெருமைக்குரிய பெயர்கள் தங்கம் வெள்ளி போன்ற நாணயங்கள் வெளியிட்டதின் மூலம் அப்போது அரசாண்ட மன்னர் கால சமூகப் பொருளாதார உயர் நிலை, பிற நாட்டு நாணயங்கள் கிடைத்துள்ளதின் மூலம் அயல் நாட்டினருடன் வியாபாரத் தொடர்பு போன்ற மிக அரிய செய்திகளை நாணயங்களின் மூலம் அறிந்து கொள்ள முடிகின்றது.

சென்னை அரசு அருங்காட்சியகத் தொகுப்பில் உள்ள நாணயங்களில் மிக முக்கியத்ததுவம் வாய்ந்தவைகளை உலோக நகல்களாக எடுத்து அவற்றை நெல்லை அருங்காட்சியகத்தில் காட்சிக்கு வைத்துள்ளோம். சில அரிய புகைப்படங்களும் இங்கு காட்சிக்கு உள்ளன. கி. மு. 600 ல் வெளியிடப்பட்ட சதமணா எனும்வெள்ளி முத்திரையிடப்பட்ட நாணயங்களும், வட்ட வடிவ வெள்ளி முத்திரை நாணயங்களும், கி. மு. 160–140ல் இந்தியாவில் வணிகம் செய்ய வந்த கிரேக்கர் மன்னர் மிராண்டர் நாணயம், கி. பி. முதலாம் நூற்றாண்டைச் சார்ந்த கனிஷ்கர் நாணயங்கள் கி. பி. 2–ம் நூற்றாண்டைச் சார்ந்த குசானர் நாணயங்கள், நான்காம் சதகர்னி, முதலாம் சந்திரகுப்தர், சமுத்திரகுப்தர், இரண்டாம்

சந்திரகுப்தர் வெளியிட்ட குப்தர் நாணயங்களின் நகல்களும் புகைப் படங்களும் காட்சிக்கு உள்ளன.

ஹர்ஷர், ஜகதேச மல்லர், இராஜ ராஜன், முதலாம் இராஜராஜன், இராஜேந்திரன், குலோத்துங்கன் போன்ற சோழர்கள் வெளியிட்ட தங்கம் மற்றும் உலோக நாணயங்கள், அலாவூதின், ஷெர்ஷா, அக்பர், ஜஹாங்கீர், ஹைதர் திப்பு வெளியிட்ட பெரிசிய எழுத்துக்கள் கொண்ட நாணயங்களும், கிருஷ்ண தேவராயர் கிருஷ்ணராஜ உடையார் வெளியிட்ட நாணயங்களும், மூன்று சுவாமி பக்கோடா, ஒற்றை மொஹர் நட்சத்திர பக்கோடா போன்ற நாணயங்களின் உலோக நகல் நாணயங்கள் உண்மை நாணயங்கள் போன்று காட்சி தருகின்றன.

இக்காட்சிக் கூடத்தைக் காணும் போது சோழர் பாண்டியர், நாயக்கர், கிரேக்கர் போன்ற மன்னர் பரம்பரையினர் வெளியிட்ட நாணயங்கள் நமக்கு கூறும் வரலாற்றுச் செய்திகளை அறிந்து கொள்ள இயலும்.

## வானதிராயர் செப்புக்காசு:

கி. பி. 14–15 ஆம் நூற்றாண்டில் மதுரை, இராமநாதபுரம் பகுதியில் ஆண்ட சுந்தரத்தோளுடையான் மாவலி வானதராயன் காசுகள் நெல்லைப் பகுதியில் கிடைத்து இங்கு காட்சிக்கு உள்ளன. இவர்கள் விசயநகர மன்னர்களின் சமயமான வைணவத்தைத் தழுவியவர்கள். அதனால் இவர்கள் காசுகளில் கருடனை பொறித்துள்ளனர். புதுக்கோட்டை மாவட்டம் திருமெய்யம் வட்டம் சேவலூரில் மாவலி வானாதராயர் கல்வெட்டு என்று ஒன்று உள்ளது. அதில் கீழ் வரும் பட்டங்கள் உள்ளன.

மூவராயர் கண்டன், பட்ட க் கானங்காத்தன்
மதியாத மன்னர் மணவாளன், வீரகஞ்சகன்
சமரகோலாகலன், – வீரபிரதாபன்
புவனேக வீரன், – திருமாலிருஞ்சோலை நின்றான்.
பூபால கோபாலன் மாவலி வாணதராயர்

இவன் கருடனை கொடியாக உடையவன். இவன் பாண்டியரை வென்று மதுரையை பிடித்துள்ளான். 'புவனேக வீரன்', சமர



வீரனின் நினைவுக்கல் கி.பி. 16ஆம் நூற்றாண்டு



வளரி, துப்பாக்கிகள், சுருள்வாள், இரும்புக்குண்டு



இரும்புக்காலப் பானைகள் ஆதிச்ச நல்லூர்



மகாவீரர், கி.பி. 8ஆம் நூற்றாண்டு

கோலாகலன்' என்றும் காசுகள் இவனது கொடியினில் கருடனைக் கொண்டுள்ளன.

## சோழர் கால செப்புக்காசு:

வட்ட வடிவில இருபக்கமும் உயர்ந்த நிலையில் பல செப்புக்காசுகள் இப்பகுதியில் கிடைத்துள்ளன. ஒருபுறத்தில் ஈழமனிதனின் உருவம் காணப்படுகின்றது. மற்றொரு புறத்தில் அமர்ந்த ஈழ மனிதனின் உருவம் உள்ளது. சில காசுகளில் பக்கவாட்டில் 'ராஜ ராஜ' என்ற நகரி எழுத்து காணப்படும். முதலாம் இராஜ ராஜனின் காசு எனலாம். இவை சுமார் 1000 ஆண்டுகளுக்கு முற்பட்டவை ஆகும்.

இவற்றுடன் பல ஆங்கிலேயர் சுல்தானியர், பன்னாட்டு நாணயங்களையும் மிகுந்த வேலைப்பாடு மிக்க பழங்கால கோட் பொத்தான்களையும் இங்கு காட்சிக்கு வைத்துள்ளோம்.

## மரச்சிற்பங்கள்:

தமிழ் நாட்டில் கோயில்கள் கட்டத் தொடங்கிய போது உற்சவ மூர்த்திகளை ஊர் வலமாக எடுத்து செல்ல மரத்தாலான தேர்களையும் அவற்றைச் சுற்றிலும் நூற்றுகணக்கான புராண இதிகாசககதைகளின் பாத்திரங்களையும் மகாபாரதம், இராமாயணம், கடவுளின் அவதாரங்கள் , தேவியரின் பலவிதத் தோற்றங்கள் முதலியவைகளும்–தெய்வ வாகணங்கள், முனிவர்கள் ஆடவல்லான், முருகன் , கணேசர் போன்ற தெய்வ உருவங்களயையும் மரச்சிறபங்களாக்கிப் பொருத்தியுள்ளணர்.

இன்றும் பல கோயில்களில் சிற்பங்கள் நிறைந்த தேர்களைக் காணமுடியும். சங்க காலத்தில் மரத்தில் நடுகற்கள் நட்டதையும், மாடமாளிகைகள் மரத்தினால் அமைக்கப்பட்டதையும் இலக்கியங்கள் வாயிலாக அறிகின்றோம். கோயிற்கதவுகளிலும் கற்பக்கிரகங்களின் விதானங்களிலும் , தேர்களிலும், கோயில் மரமண்டபங்களிலும் கிராமங்களில் வீர மரணம் அடைந்தோர் நினைவுச் சின்னங்களிலும், வீடுகளின் வாயில் நிலைகளிலும் மரச் சிற்பங்கள் எழிலாகவும் மிகுந்த கலைச்செரிவுடனும் படைக்கப்பட்டுள்ளதைக் காண முடியும்.

மரத்தைத் தேர்வு செய்து அவற்றில் கலைநயமிக்க சிற்பங்களை வடித்திடும் திறம் பல மன்னர்களின் போற்றுதலாலும், ஆதரவினாலும் வலுப்பெற்று இருந்தது. இக்காட்சிக்கூடத்தில் எழிலுடன் காட்சி தரும் மிக அழகிய வேலைப்பாடுள்ள யாளிகளும், யாளியின் மீது அமர்ந்துள்ள வீரனும் சிறப்பானவை.

திருநெல்வேலிப் பகுதியில் அழிந்துபட்ட தேர்களில் இருந்து கி. பி. 18– ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கலையம்சம் மிக்க சங்க நிதி, சூரியன், பூச்செரியும் பெண்கள், துவாரபாலகர், சந்திரன் போன்ற எழில் மரச் சிற்பங்களும், இராமநாதபுரம் இராசசிங்க மங்கலத்தைச் சார்ந்த கேடயத்துடன் கூடிய போர் வீரனின் உருவம், தமது இரு தேவிகளுடன் திருமால் மிக எழிலுடன் நர்த்தனம் புரியும் கணேசர், முனிவர், யாளிமீது மனிதர் மற்றும் பல வகைத் தோற்றங்களில் யாளியின் உருவங்கள் சிறப்புடன் காட்சி தருகின்றன.

## நர்த்தன கணேசர்:

நாட்டிய முத்திரையும் மகிழ்ச்சியில் நடனமாடும் கணேசரின் மரச்சிற்பமும் எழில் நிறைந்தது. சிற்பியின் உளி விளையாடியுள்ளது. நான்கு கரங்களுடன் நர்த்தனமாடும் கணேசரின் மேல் இரு கரங்களில் வலது கரத்தில் சிவனின் மழுவும் இடது கரம் பாச கயிறை விரல் நுனியில் பிடித்த நிலையிலும் கீழ் இரு கரங்களில் வலது கரம் ஒடிந்த தந்தத்துடனும் இடது கரம் பழத்தை உள்ளங்கையில் ஏந்தி அதை தும்பிக்கையில் ஏந்திய நிலையிலும் உள்ளது. வலது காலைத் தூக்கி ஆடும் போது அதன் அடியில் அவரது வாகனமான மூஞ்சூறு நுழைந்து நிற்கின்றது. இருபுறமும் இரு தேவர்கள் சாமரத்தைத் தூக்கி பிடித்த நிலையில் பின்புறம் மலர் ஆரங்கள் வளைந்து செல்லும் விதமாக அமைக்கப்பட்டுள்ளது. தலையில் அகன்ற மகுடம் உள்ளது. இராச சிங்க மலத்தில் கிடைத்த கி. பி. 16–ஆம் நூற்றாண்டின் கலை வடிவம்.

## பழைய கற்காலம்:

கற்கால மனிதர்கள் தாங்களே தயாரித்து உபயோகித்த கற்கருவிகள் உலகம் முழுவதும் பல பகுதிகளில் கிடைத்துள்ளன. கற்கால மக்கள் கல் ஆயுதங்களை மட்டுமின்றி மரம், எலும்பு, கொம்பு போன்ற இயற்கைப் பொருட்களையும் ஆயுதங்களாக்கி உபயோகித்தனர். தொல் பொருள் வல்லுனர் ராபர்ட் புரூஸ்புட் 1863 ல் முதன் முதலில்

இந்தியாவிலேயே தமிழ்நாட்டில் கண்டு பிடித்தார். இது தமிழக வரலாற்று முற்காலத்திற்கான ஆய்வுக்கு உதவியது.

கற்காலமக்கள் உபயோகித்தக் கற்கருவிகள் கடினக் கற்களால் ஆனவை. அவைகள் மற்ற கற்களினால் செதுக்கப்பட்டு, கூறாக்கப்பட்டு வெட்டுமுனை உடையதாகவும் ஆக்கப்பட்டன. மேற்பகுதி கரடு முரடாகவே இருந்தது. நிலவியலின் படிமங்களையும், அவைகள் காட்டும் வெட்பதட்ப நிலை மாற்றங்களையும் , அக்காலத்துப் பிராணிகளின் எலும்புகளையும் கொண்டு கற்காலத்தைக் கணக்கிட்டனர். தென் இந்தியாவின் பழைய கற்காலம் சுமார் 125,000 லிருந்து 500,000 ஆண்டுகளென கூறப்படுகின்றது. அக்கால மக்கள் வேட்டையாடியும், நாடோடியாகத் திரிந்தும், கிழங்குகளைத் தோண்டி எடுத்தும் காய் கனிகளை உண்டும் வாழ்ந்தனர்.

பழைய கற்காலக் கருவிகள் ஏராளமாக சரளைப் படுகைகளில் கிடைத்துள்ளன. அக்கருவிகளின் மீது படிந்துள்ள பூமியின் தாதுக்களின் கரைகளின் மூலம் பல ஆயிரம் ஆண்டுகள் பழமையான கருவிகள் என்பதை உணரலாம். சில இடங்களில் கல்மாறிகளுடன் இணைந்து கிடைத்துள்ளன. இங்குள்ள கருவிகள் குவார்ட்சைட்டில் செய்யப்பட்டுள்ளன . ஐரோப்பியக் கருவிகள் பிளண்ட் கல் வகையில் செய்யப்பட்டவை.

இங்கு காட்சிக்கு உள்ள பழைய கற்காலக் கருவிகள் கைக் கோடாரிகள், வெட்டும் கருவி, பிளக்கும் கோடாரி போன்ற வகையைச் சார்ந்தவை ஆகும். ஆற்றில் உருண்டு ஓடிய கூழாங்கற்களை எடுத்து அதன் பகுதிகளை நீக்கி ஆயுதங்களைத் தயாரித்தனர. கைப்பிடி இன்றி தங்கள் கைகளால் பற்றியே உபயோகித்துள்ளனர். இதனால் இக்கருவிகளை கைக் கோடாரி என்றும், அதிகமாகச் செதுக்கப்பட்டதை வெட்டும் கருவி என்றும் கோடாரி போன்று பிளக்கப் பயன்பட்ட கருவிகளைப் பிளக்கும் கோடாரி என்றும் அழைக்கிறோம்.

பழைய கற்காலத்தின் இரண்டாவது பகுதியில் சிறிய நீள்வட்டவடிவ கற்கருவிகளை உபயோகித்தன்ர். இவை கைகோடாரி யோன்று இருந்தாலும் பல முனைகளில் உபயோகிக்க முடியும். இக்கருவிகளையும் கைகோடாரி என்றே அழைக்கின்றனர். ஆங்கிலத்தில் ஒவேட் என்பர். தமிழ் நாட்டில் சென்னைக்கு அருகில் செங்கல்பட்டுக்குப்பக்கத்தில் அத்திரம்பாக்கம் எனும் ஊர் ஆற்றோரம்

ஏராளமான பழைய கற்காலக் கருவிகள் கிடைத்துள்ளன. இவற்றில் சில இங்கு காட்சி தருகின்றன.

## இடைக்கற்காலம்: [நுண்ணிய கற்காலக் கருவிகள்]

கல்வெட்டுகளில் நில விற்பனையைக் குறிப்பிடும் போது நிலத்தைச் சார்ந்ததாகச் சில பொருட்களைக் குறிப்பிடுகின்றனர். உதாரணமாக ''தேன்படு பொதும்பும், மீன் படு பள்ளமும், மேல் நோக்கிய மரமும் , கீழ்நோக்கிய கிணறும், புற்றும், தெற்றியும், மனையும், மனைப்படப்பும்'' போன்றவற்றைக் குறிப்பிடலாம். தெற்றி எனறால் மேடு என்று பொருள். நெல்லை மாவட்டப் பகுதியில் ஒரு சில செம்மண்மேட்டுப் பகுதிகளை தேரி என அழைக்கின்றனர். இந்தப் பகுதிகளில் மிக நுண்ணிய கற்காலக் கருவிகள் நிரம்பக் கிடைத்துள்ளன. இந்தத் தேரி என்ற சொல்லே பின்னர் தெற்றி என மாறி இருக்கும்.

சாயாபுரத்தில் புரூஸ்புட் என்ற தொல்லியல் அறிஞர் சேகரித்த நுண்ணிய கற்காலக் கருவிகள் 600 முதல் 10000 ஆண்டுகளுக்கு முற்பட்டவை என்பர். இவற்றில் கத்தி, ரம்பம்,அரிவாள், வாள், துளையிடும் கருவி போன்ற சிறிய வடிவங்களால் ஆன கருவிகள் சேகரிக்கப்பட்டு காட்சி தருகின்றன. இந்தக் கருவிகள் கண்ணாடி போன்றும், சாக்லேட் கலரிலும் இருக்கும். இவை கற்களில் இருந்து எடுக்கப்படும் செதில் போன்ற கற்களே ஆகும். இந்த நுண்ணிய கருவிகளை எலும்புகளிலும், மரக்கட்டைகளிலும், கொம்புகளிலும் செலுத்தி உபயோகப்படுத்துவர்.

காட்சிப் பெட்டியில் இந்தக் கருவிகள் அவை உபயோகப்படுத்தும் முறை அவை தயார் செய்யப்படும் முறை ஆகிய வரைபடங்களுடன் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

## புதிய கற்கால ஆயுதங்கள்:

நாகரீகம் அடைந்து மக்கள் பானை செய்யவும், அவைகளில் வண்ணங்கள் தீட்டவும், குடும்பமாக சேர்ந்து வாழவும், பயிர்த்தொழில் செய்யவும், பிராணிகளை வளர்க்கவும் கற்றுக் கொண்டனர். பழைய கற்கால மக்கள் உபயோகித்த கற்கருவிகளைப் போன்றே இவர்களும் கருவிகளைத் தயார் செய்து அவற்றைப் பாறைகளில் தேய்த்து வழவழப்பாகவும் கூர்மையாகவும் ஆக்கினர். மரங்களை வெட்டவும்,

பிராணிகளை வெட்டவும், உரோமம், தோலை நீக்கவும் கற்கருவிகளைப் பயன்படுத்தினர்.

இந்த வழவழப்பான கற்கருவிகளை மரக்கிளைகளிலும், கொம்புகளிலும், எலும்புகளிலும் பொருத்தி மரநாரினாலும், நரம்புகளைக் கொண்டும் இருகக் கட்டியும் உபயோகம் செய்தனர்.

பழங்குடி மக்கள் வழவழப்பான கூர்மையான கல் ஆயுதங்களைத் தங்களின் கோயிலில் இன்றும் வைத்து அவைகளைத் தம் முன்னோர்களின் பொருட்கள் என்று வணங்கி வருகின்றனர். இவை கி.மு. 4000 ஆண்டுகளுக்கு முற்பட்டவை எனலாம். சேலம் மாவட்டம் சேர்வராயன் மலையில் உள்ள பழங்குடி மக்களின் கோயில்களில் இருந்து சேகரிக்கப்பட்ட புதிய கற்காலக் கருவிகள் இங்கு காட்சிக்கு உள்ளன.

## இரும்புக் காலம்: [பெருங்கற்காலம்]

உலகில் இரும்பின் பயன்பாடு கி.மு. 2000–த்தில் உருவாயிற்று. மேற்காசியப் பகுதியில் வாழ்ந்த மக்கள் முதன் முதலில் இரும்பை உருக்கக் கற்றுக் கொண்டனர். தமிழகத்திலும் இரும்பின் பயன்பாடு நகர நாகரீகம் உருவாவாற்குத் துணை நின்றது. தமிழகத்தில் அகழாய்வில் கிடைக்கப்பெற்ற இரும்பு ஆயுதங்களின் மூலம் இரும்பு உருக்கிய நிலையை அறிய முடிகிறது. ஆதிச்சநல்லூர், கொடுமணல், சாலூர், சூலூர் போன்ற இடங்களில் இரும்புக்கருவிகள் கிடைத்துள்ளன. ஆதிச்சநல்லூரில் ஊதுலைகள் அகழ்ந்தெடுக்கப் பெற்றுள்ளன.

ஆதிச்சநல்லூரில் கிடைத்த பொருட்களுள் இரும்புக் கொழுவும் ஒன்றாகும். இதன் காலம் கி. மு. 7–8 நூற்றாண்டாகக் கருதப்படுகின்றது. எனவே சங்க காலத்திற்கும் முன்பே கொழு பயன்பாட்டில் இருந்தமைப் புலனாகிறது.

ஆதிச்சநல்லூர் உலகில் மிகப் பெருங்கற்கால பெரிய மயானமாகும். 114 ஏக்கர் பரப்பளவு கொண்டது. இவ்விடத்தில் புதைக்கப்பட்ட முதுமக்கள் தாழிகள் உருவில் முட்டை வடிவமும், அகன்ற வாயும், குறுகிய அடிப்பாகமும் கொண்டவை. இவை ஆயிரக்கணக்கில் இங்கு கிடைத்துள்ளன. இவைகளில் காணப்பட்ட பொருட்கள் பல அளவுகளையும் உருவங்களையும் கொண்டவை.

இங்கு கிடைத்த ஆபரணங்கள் பல வகைப்படும்.

அவற்றில் முக்கோணம், இடைவிட்டக் கோடுகளின் வளைவுகளின் கொண்ட மெல்லிய தங்கத் தகட்டில் புள்ளிகளிட்டு அலங்கரித்த நெற்றிப்பட்டங்கள் ஒருவகையாகும். இவை இறந்தவரின் நெற்றியில் கட்டப்பட்டன எனக் கருதப்படுகிறது. இவ்வித நெற்றி பட்டங்கள் கட்டுவது இன்றளவும் தென்னிந்தியரின் திருமண விழாக்களில் ஒரு சடங்காக இருக்கிறது.

புதுமணத் தம்பதிகளின் நெற்றியில் வயதிலும் அறிவிலும் மூத்தவர்கள் இப்பட்டத்தை கட்டுவது, திருமணமானவர்கள் எனபதைக் குறிக்கவும், இனி புதிய நிலையும், அதிப் பொருபபும் கொண்டவர்கள் என்பதை உணர்த்துவதும் ஆகும். மற்ற ஆபரணங்கள் வெண்கலம், கிளிஞ்சல், எலும்பு போன்றவைகளில் செய்த வளையல்கள், கடகங்கள், மோதிரங்கள் ஆகும். எருமைகள், செம்மரி ஆடுகள், சேவல்கள், புலிகள், மான்கள், யானைகள், பறக்கும் பறவைகள் போன்றவை வெங்கலத்தில் செய்யப்பட்டு உள்ளன. வெண்கலத்தினால் ஆன மெல்லிய வடிக்கும் குவளைகளில் வடித்துவாரங்கள் இடைவிட்ட கோடுகள் போலவும், முழு வட்டம் அரை வட்டம் போலவும் பல விதங்களில் காணப்படுகின்றன. இவைகள் பெரிய கனமான வெங்கலப் பாத்திரங்களுக்கு மூடி போல் அமைந்துள்ளன.

வெங்கலத்தினால் ஆன பல புலிகளின் படிமங்களுடனும் சேவல் மற்றும் பிராணிகளின் உருவங்களுடனும் கிடைத்த பாத்திரங்களின் மூடி போன்றவை முதலில் இவற்றின் பயன்பாடு தெரியவில்லை என்றாலும் மதுரை, நெல்லைப் பகுதிகளில் கரகம் ஆடும் நாட்டுப்புறக்கலைஞர்கள் தம் தலையில் கிளியின் உருவம் கொண்ட கரக டோப்புகளை வைத்து ஆடுவதுபோல் இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்னரே புலி, மான்கள் கொண்ட கரகங்களைத் தலையில் ஏந்தி விளையாடியுள்ளது புலனாகிறது.

சவக்குழிகளில் காணக் கிடைத்த இரும்புப் பொருட்கள்— போர்க்கருவிகளும், உழவுச் சாமான்களும் ஆகும். இக்கருவிகள் சவத்தை சுற்றிலும் கீழ் நோக்கிய நிலையில், இறந்தவரின் சுற்றத்தார் அல்லது உறவினர்கள் துக்கத்தில் புதைந்தது போல் காணப்படுகின்றன. அதில் காணும் பானைகள் சிவப்பும் கருப்பும் கலந்த நிறத்தில் காணப்படுகின்றன. கூம்பு வடிவ பானைகள் நிற்க, கீழே வளையங்களும் மேல் வாயை மூட புள்ளிகளால் அலங்கரித்த வெகு நேர்த்தியான மூடிகளும் பொருத்தப்பட்டுள்ளன.

தாழிகளில் காணக்கிடைத்த மனித எலும்புகள், மண்டை ஓடுகள் தென் இந்தியர்கள் 2500 ஆண்டுகளுக்கு முன்பு எவ்வினத்தைச் சார்ந்தவர்கள் என்பதை அறிய உதவுகின்றன. இங்கு கண்டெடுத்த எண்ணிறந்த மண்டை ஓடுகளில் இரண்டு ஆஸ்திரேலியர் இனத்தையும், ஆறுமத்திய தரைக் கடலினத்தையும் ஒன்று ஆல்பன் இனத்தையும் சேர்ந்தவை. இவ்வினங்களினால் தென்னிந்தியாவில் இன்று போல் அன்றும் பல இனத்தவரின் நேரிடைத் தொடர்பு இருந்தது என்பதை அறிகிறோம்.

ஆதிச்சநல்லூரில் கிடைத்த முதுமக்கள் தாழி புதைக்கப்பட்ட நிலையில் காட்சிப் பெட்டியில் காட்சி தருகின்றது. ஏராளமான மண் கலயங்களும், சிகப்பு கருப்புப் பானைகளும், தாங்கியின் மீது காட்சியளிக்கின்றன. இரும்புக்கருவிகளான குத்தீட்டி, கலப்பை, சொரஸ்டரியன் வகை நான்கு முனை வாள்களும் காட்சிக்கு உள்ளன.

இரும்புக் கால மக்கள் மறு பிறப்பிலும், ஆவியிலும் நம்பிகைகை கொண்டு இருந்தனர். இரண்டு விதமான ஈமக்கிரியை வழக்கத்தில் இருந்தது. இறந்தவரை எரித்து அவர்களின் எலும்பு அஸ்தியினை சேகரித்து அவர்கள் உடைமைகளையும் தாழியில் சுற்றிலும் வைத்துப் புதைத்தனர். ஒருமுறை இப்பூமியில் பிறந்தவருக்கு இறந்த பின்பும் தொடர்பு ஏற்படும் என்பதால் அதைத் தடுக்க இருவகைப் புதையலைச் செய்துள்ளனர். உடைமைகளைத் தேடி ஆவி வரும் என்று நம்பியே அவர்கள் உபயோகித்த பொருட்களையும் உடன் புதைத்துள்ளனர். இதுவே பிற்காலத்தில் 'சதி' ஏற்பட வழிவகுத்துள்ளது. இறந்தவரின் மனைவியும் தீக்கிரையாகி உள்ளனர்.

இங்குள்ள இரும்பு சூலாயுதத்தில் நாகம் சுற்றிக் கொண்டு இருப்பதையும் மதுரை அழகர் கோயில் குகை ஓவியத்தில் சூலாயுதம் வரையப்பட்டதையும், சிந்து சமவெளி அச்சுக்களில் பசுபதியுடன் உள்ள சூலாயுதத்தையும் இணைத்து ஆய்வு செய்யும் போது 5000 ஆண்டுகளுக்கு முன் தோன்றிய சிந்து சமவெளியின் தொடர்பு ஆதிச்சநல்லூரிலும் உள்ளதை அறிய முடிகின்றது.

வ.உ.சிதம்பரனார் மவட்டம் விளாத்திகுளம் அருகில் பசுவந்தனை கிராமத்தில் கிடைத்த முதுமக்கள் தாழி ஒன்றும் இங்கு காட்சிக்கு உள்ளது. திருநில்லிபுத்தூர், இராசபாளையம் தாழிகள் மிக அகலமான வாயுடன் அகன்று காணப்படுகின்றன.

பலவிதமான இரும்புக்கால அல்லது பெருங்கற்கால புதையிடங்களைக் குறிக்கும் கல்லறைகளின் புகைப்படங்களும் வரைபடங்களும் விளக்கத்துடன் காட்சிக்கு உள்ளன. 'பிரம்மகிரி' கல்வட்டக் கல்லறை, கேரள குடைக்கல்லு, தென் மாவட்ட நடுகல் கொடைக்கானல் கல்வீடு பதுக்கைகள், மண்மேடுகள் போன்ற ஈமச்சின்னங்கள் குறிப்பிடத்தக்கவை.

## தென் இந்தியாவில் ரோமானியர்:

பண்டைய இந்திய ரோமாபுரி, வெனிஸ் ஆகிய நாடுகளுடன் வாணிபத் தொடர்பு கொண்டிருந்தது என்பதற்கு, தென் இந்தியாவில் புதைபொருளாகக் கிடைத்த ரோமானியர்கள் வெனிஷியர்களின் நாணயங்கள் பெரிதும் உதவி புரிகின்றன. புதுச் சேரியின் அருகில் உள்ள அரிக்க மேட்டில் கிடைத்த பொருட்கள், ரோமாபுரி, மற்றும் பல மேலை நாடுகளுடன் இந்திய வாணிபம் கி. மு. முதல் நூற்றாண்டு முதல் கி.பி. முதல் நூற்றாண்டு வரை உச்ச நிலையில் இருந்தது என்பதற்கும், அந்நாடுகள் தென்னிந்தியாவில் இருந்து ஆடைகள், அணிகள், வாசனைப் பொருட்கள், கண்ணாடிமணிகள், விலையுயர்ந்த கற்கள், முத்துக்கள், சாயப்பொருட்கள் முதலியவைகளை இறக்குமதி செய்து கொண்டு, அவற்றுக்கு ஈடாகத் தங்கத்தையும், மத்திய தரைக்கடல் மதுவை இருபிடிகள் கொண்ட ஆம்போரே என்னும் பெரிய ஜாடிகளின் ஏற்றுமதி செய்தனர். பிற்காலத்தில் வந்த போர்த்துக்கீசியர், டச்சுக்காரர், ஆங்கிலேயர் தங்கள் வியாபாரத்தை நிலை நாட்ட எப்படி முதன் முதலில் இந்தியக் கடற்கரைகளில் தங்கள் தளங்களையும், தொழிற்சாலைகளையும் அமைத்து நகரங்களை விருத்தி செய்தார்களோ அதே போல் 2000 ஆண்டுகளுக்கு முன்பு ரோமானியரும் தங்கள் தொழிற்சாலைகளையும் நிலையங்களையும் கடற்கரைகளில் அமைத்து அவைகள் நகரங்களாகப் பெருகுவதற்கு உதவி புரிந்தனர்.

அரிக்க மேட்டில் இதுவரையில் கண்டுள்ள முக்கியத்துவம் எண்ணவெனில் இங்குதான் முதன் முதலில் அசோக பிராமி லிபியில் தமிழ் மொழியில் குறிக்கப்பட்ட பானை ஓடுகள் கண்டெடுக்கப்பட்டன. அரிக்கமேட்டில் அரிட்டைன், ரூலட், ஆம்போரோ என்னும் பானைகளுடன், அதே காலத்தில் செய்யப்பட்ட இந்தியப் பானைகளும் கலந்து கிடைப்பதற்கு முன்பு, இந்திய வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தை உறுதியாக நிர்ணயிக்க முடியவில்லை. மேற்கூறிய இத்தாலியப் பானைகளைச் செய்தவர்களில் இடமும், காலமும், பெயரும்,

வரலாறும் இத்தாலியில் சரித்திர வாயிலாக இருந்தமையாலும், இந்தியப் பானைகள் செய்தவைகளின் வரலாறு இல்லாமையாலும், அரிக்கமேட்டில் கிடைத்த இத்தாலிய பானைகளைக் கொண்டு முதன் முதலில் தென்னிந்தியப் பண்பாட்டின் காலத்தை நிர்ணயிக்க முடிந்தது. அரிக்கமேட்டின் காலத்தை நிர்ணயிக்க முடிந்தமையால் அத்துடன் தொடர்பு கொண்ட பிரமகிரி, மாங்கி, அமராவதி போன்ற பல தென்னாட்டுப் புதைப்பொருள் ஆராய்ச்சி இடங்களின் பண்பாட்டுக் காலத்தையும் நிர்ணயிக்க முடிந்தது.

உரோமானியர்களின் பானை மற்றும் கலைப்பொருட்களின் வரைப்படங்களும், புகைப்படங்களும் காட்சிக்கு உள்ளன. நெல்லை அருகில் கொற்கையிலும், அழகன் குளத்திலும் உரோமானியர் சான்றுகள் அகழாய்வில் கிடைத்துள்ளன.

## வளரி: (பூமராங்)

தென் பாண்டி மண்டலத்திற்கு மட்டுமே உரிய ஆயுதம் வளரி. எழுத்துக்களின் ஆயுதம் தமிழுக்கே சொந்தம் போல, இந்த விந்தை ஆயுதத்திற்குச் சொந்தக்காரர்கள் பாண்டிய நாட்டு பழங்குடியினர் மட்டுமே. வளைத்தடி அல்லது வளரி எனத் தமிழில் அழைக்கப்படும் இவ்வாயுதத்தை ஆங்கிலத்தில் 'பூமராங்' எனக் குறிப்பிடுவர்.

பாண்டிய நாட்டில் போர் செய்வதை அல்லது இராணுவ சேவையை தொழிலாகக் கொண்டவர்கள் கள்ளர், மறவர், அகமுடையர் எனும் மூன்று சமூகத்தவர். இவர்களை ஆங்கிலேயர் ''பழங்குடிகள்'' என்றே குறிப்பிட்டுள்ளனர். மானிடவியல் அறிஞர் டாக்டர் எ. அய்யப்பன் கள்ளர்களை ''சமவெளிப் பழங்குடிகள்'' என்று அழைக்கிறார்.

வளரி பாண்டிய நாட்டின் பழங்குடிகளின் போர்க்கருவியாகவும் வேட்டைக் கருவியாகவும் பயன்பட்டுள்ளது. வளரிகள் மரத்திலும், இரும்பிலும், தந்தத்திலும் கூடச் செய்யப்படுவதுண்டு. இரும்பு வளரி போருக்கும் மரவளரி வேட்டைக்கும் பயன்படுத்தப்பட்டன. பிறைவடிவிலான அதன் கூரான பகுதி மற்றப் பகுதியை விடக் கனமாக இருக்கும் வெளிவிளிம்பே கூராக்கப்பட்டிருக்கும். பயிற்சி உள்ளவர்கள் இலேசான முனையைக் கையில் பிடித்து, வேகம் கொடுப்பதன் பொருட்டு, சில முறை தோளுக்கு மேலே சுற்றி விரைவுடன் இலக்கு நோக்கி எறிந்திட அது இலக்கைத்

தாக்கி விட்டு எறிந்தவர்களுக்கு திரும்ப வந்து சேரும். திரும்ப வரும்போது அசந்தால் எறிந்தவர் கை துண்டாகும். இதைத் திரும்பி வரும் வளரி என்பர்.

பண்டைக்காலத்தில் படைவீரர்கள் தம் கொண்டையில் வளரியைச் சொருகி இருப்பார்களாம். ஆபத்து வரும் என்று தெரிந்தால் உடனே கொண்டையில் உள்ள வளரியை உருவி எதிரியை நோக்கி வீசி வீழ்த்துவர். இங்கு காட்சிக்கு உள்ள வளரி இரும்பால் ஆனது. ஆஸ்திரேலியப் பழங்குடிகள் தாம் திரும்பி வரும் வளரியை உபயோகிப்பதாகவும் மற்றவை திரும்பி வராத வளரிகள் என்றும் அமெரிக்க மானிடவியல் மேதை ஏ. எல். குரோபர் அறிவுறுத்துகிறார்.

## இசைக் கருவிகள்:

தென் இந்திய இசைக் கருவிகளை நரம்புக் கருவிகள், காற்றுக் கருவிகள், தோற் கருவிகள் என மூன்று வகையாகப் பிரிக்கின்றனர். நரம்புக் கருவிகளில் முன்னர் நரம்பை உபயோகித்து வந்தது போய் தற்போது நைலான் இழைகளையும் கம்பிகளையும் பயன்படுத்தி இசை மீட்டுகின்றனர். தமிழகத்தின் இலக்கியங்களிலும், சிற்பங்களிலும் ஓவியங்களிலும் காணப்படும் யாழ் எனும் இசைக் கருவி தற்போது மறைந்து விட்டது. பர்மியர்கள் இப்போதும் இவற்றை உபயோகித்து வருகின்றனர்.

இசைக் கருவிகள் கூடத்தில் பழமையான தஞ்சாவூர் வீணை யாளியின் முகத்துடனும் மிகுந்த வேலைப்பாடுகளுடனும் உள்ளது. சிறிய முரசு எனும் தோலிசைக் கருவியும் மங்கல இசை வாசிக்க உதவும் நாதசுவரம், ஒத்து, தவில் போன்ற இசைக் கருவிகளும் முடிவு வாத்யம், [மிருதங்கம்] தபலா, பாயா மற்றும் நெடுங்குழல் எனப்படும் புல்லாங்குழல் வகைகளும் காட்சி தருகின்றன. தற்போது அருகிவிட்ட பஞ்சமுக வாத்யம், மகரயாழ், வில்யாழ் போன்ற இசைக் கருவிகளின் ஒளிப்படங்களும் சிற்பங்களில் இசைப்பது போன்றுள்ள பழமையான ஒளிப்படங்களும் காண்போருக்கு தன் விளக்கம் அளித்து வருகின்றன.

## இறைவனுக்கு காணிக்கை பொருட்கள்:

நோய் வாய்ப்பட்டவர்களும், தங்களுக்குக் கொடிய விலங்குகளில் இருந்து பாதுகாப்பு அளிக்கும்படியும் வேண்டுதல் செய்து

தெய்வ சன்னதியில் வெள்ளியிலும், மரத்திலும் இன்னும் பல உலோகங்களிலும் கலைநயம் மிக்க காணிக்கைப் பொருட்களைச் செய்து இறைவனுக்குச் செலுத்துகின்றனர். மணமான பெண்கள் குழந்தை வேண்டித் தங்களுக்கு குழந்தை பிறந்ததும் மரக்கட்டையில் தொட்டில் செய்து அதில் தவழும் குழந்தையின் பொம்மையைக் கட்டி தொங்க விடுகின்றனர். வெள்ளியில் செய்த கை கால், முழு உருவம், தலை, நாகம் போன்ற கலைப் பொருட்களும் இங்கு காட்சி தருகின்றன. இவை மக்களின் கடவுள் நம்பிக்கையை வெளிப்படுத்துகின்றன.

மத வேறுபாடின்றி இந்து, முஸ்லீம், கிறித்துவ சமயத்தினர் இவை போன்ற காணிக்கைகளைக் கடவுளுக்குச் செலுத்துவது வழக்கம். இந்துக்கள் இஸ்லாமியர் தர்ஹாக்களிலும், இஸ்லாமியர் இந்துக் கோயில்களிலும் தம் காணிகைகைகளைச் செலுத்தும் வழக்கம் இன்றும் உள்ளது.

குழந்தைகளுக்கு சீர்தட்டாமல் இருக்க ஒரு வகை வேரினால் கட்டப்படும் கழுத்து மாலைகளும் கூட காட்சிப் பொருளாக உள்ளன. உத்திராட்ச மாலைகளும் உள்ளன. இவை நம் மக்களின் பழமையான நம்பிக்கையையும் பண்பாட்டினையும் எடுத்தியம்புகின்றன.

## சிறுவர் காட்சிப் பெட்டி:

குழந்தைகளுக்கு பொம்மைகள் மீது ஆர்வம். இவர்கள் அருங்காட்சியக விலங்குகளயையும் பறவைகளையும் பார்த்து மகிழ்ந்தாலும் சிறு சிறு பொம்மைகளையும், சுடுமண் பொம்மைகளையும், பல மாநில மக்களின் நடன ஆடை அமைப்புகளயையும், குழந்தைகள் பார்த்து மகிழும் விதமாக பிள்ளையார், முருகன், கல்விக்கடவுள், கிருஷ்ணர், காளி, இலக்குமி, இயேசு, திருமால் போன்ற தெய்வங்களின் பொம்மைகளையும் நமது மண்ணில் மிகுந்த வேலைப்பாடுகளுடனும் வழவழப்பாகச் செய்யப்பட்ட கரிசிரி எனும் வகையைச் சார்ந்த நாராயண கூசா, மாயாஜால நாராயண கூசா இன்னும் சில வகைக் கூசாக்களைச் சேகரித்துக் காட்சிக்கு வைத்துள்ளோம். பல மாநிலப் பெண்கள் தங்கள் நடனங்களின் போது அணியும் ஆடைகளுடன் காட்சி தரும் பொம்மைகளும் உள்ளன.

வருங்காலத்தில் சிறுவர்களுக்காக அறிவியல் காட்சிப் பொருட்களும் காட்சிக்கு வைக்கப்பட உள்ளன. இவை நிச்சயம் சிறுவர்களின் அறிவியல் அறிவை வளர்க்க உதவும்.

## பழங்குடிகளின் பண்பாடு:

திருநெல்வேலி மாவட்டத்தில் குற்றாலம், பாபநாசம், களக்காடு, சிவகிரி மலைப் பகுதிகளிலும், கோவில்பட்டி, ராஜபாளையம், திருவில்லிப்புத்தூர் மலைப்பகுதிகளிலும் பழங்குடி மக்கள் வாழ்கின்றனர். இவர்களின் தொழில், பண்பாடு, வாழ்க்கை நிலை முதலியவற்றை எடுத்துக் காட்டும் விதமாக காளி, காட்டு நாயக்கர், பழியர் போன்ற பழங்குடி மக்களின் ஓவியங்களுடன் அவர்கள் வசிக்கும் காடு, செய்யும் தொழில் பின்னணியில் அம்மக்கள் உபயோகித்து வரும் பொருட்களுடன் தனித்தனியாக காட்சிப் பெட்டிகள் அமைக்கப்பட்டுள்ளன.

## பழியர்:

நெல்லை மாவட்ட மலைப்பகுதிகளிலும், மதுரைமற்றும் திண்டுக்கல் மாவட்டங்களிலுள்ள பெரியார், பழனி, கொடைக்கானல் மலைகளிலும் வாழும் பழியர் பழங்குடி மக்கள் மிகவும் பின்தங்கிய பழமையான பழங்குடிகளாவர். பழனி மலையில் வாழ்பவன் என்பதைக் குறிக்கும் பழனியன் என்ற பெயரை நாளடைவில் பழியன் என மறுவியதெனலாம்.

இம் மாவட்டத்தில் சங்கரன் கோவில் வட்டத்தில் மேற்குத் தொடர்ச்சி மலைச்சாரலில் அமைந்திருக்கும் புளியங்குடி கிராமத்திலும், சிவகிரி வட்டத்திலுள்ள தலையணை மலைகளிலும் பழியர்கள் வாழ்கின்றனர். இவர்கள் குட்டையாக மெலிந்து வாடிய உடற்கட்டை உடையவர்கள். அருகில் உள்ள காடுகளிலும் மலைச் சாரல்களிலும் கனி, கிழங்கு போன்ற உணவுப் பொருட்களைசேகரிக்கும் பழக்கத்தை இன்றும் தொடர்கின்றனர். காட்டுக் கிழங்குகள், வேர்க்கிழங்குகள், இலைகள், தேன், கோந்து, கனி வகைகள், கார மிளகாய் போன்றவை இவர்களின் சேகரிப்பில் குறிப்பிடத்தக்கவை. பாறை இடுக்குகளிலும் வெடிப்புக்களிலும் தேன் எடுக்கக் கயிற்றேணியைப் பயன்படுத்துகின்றனர். இங்குள்ள மூலிகைகளின் மருத்துவத் தன்மைகளில் மிகுந்த நம்பிக்கை கொண்டுள்ளனர். பழியரின் வெற்றிலை, வள்ளிக் கிழங்கு, பசைப்பெட்டி, சிக்கி முக்கிக்கல், சிரியா நங்கை எனும் விஷ முறிவுச் செடி, கத்தி, இரும்புத் துண்டு போன்ற பொருட்கள் காட்சிக்கு உள்ளன. தலையணை மலைகளின் குடியிருப்பில் சுமார் பத்து பழியர் குடும்பங்கள் உள்ளனர். இவர்களில் பலர் தோட்டங்களில் தொழிலாளராகவும் அடிமை போன்றும் குறைந்த கூலியில் பணி செய்து வருகின்றனர்.

## காணிப் பழங்குடி:

காணிப்பழங்குடியினர் காணிக்கார், காணியன், காணிக்காரன், வேலன்மார், மலையரசன், மலை வேடன் என்னும் பெயர்களாலும் அழைக்கப்படுகின்றனர். இம்மக்கள் நெல்லை அம்பாசமுத்திரம் வட்டத்திலுள்ள மலைப்பகுதிகளிலும் கன்னியாகுமரி மாவட்ட மலைப்பகுதிகளிலும் வாழ்கின்றனர். நேர்மையும், நல்லொழுக்கமும், வாய்மையும் கொண்ட இம்மக்கள் கூச்ச சுபாவம் உடையவர்கள். நெடுங்காலத்திற்கு முன்பாக இவர்கள் திருவாங்கூரில் இருந்து வந்து பாபநாசம் வட்டத்தில் குடியேறியதாகக் கூறப்படுகிறது. இவர்கள் ஐந்தடி ஐந்து அங்குலத்திற்குட்பட்டுச் சற்றுக் குள்ளமான உருவமும், அடர்ந்த தலை முடியும் கொண்டுள்ளனர்.

மரவள்ளிக் கிழங்கும், தேனும் காட்டில் கிடைக்கும் பல வகையான பழங்களும் இவர்களின் உணவில் இடம் பெறுகின்றன. இடம் மாற்றும் வேளாண்மையில் ஈடுபடும் காணிப்பழங்குடி மக்கள் அருகில் உள்ள ஓடைகளில் மீன் பிடிப்பதிலும் நாட்டம் கொண்டுள்ளார். முற்காலத்தில் நெருப்பு மூட்ட சிக்கிமுக்கிக் கல்லையும் இரும்புத் துண்டையும் பயன்படுத்தினர். மந்திரங்களின் மூலம் நோய்களைப் போக்க முடியும் என நம்புகின்றனர். காணி மருத்துவர் இம்முறையில் நோயை ஓட்டும் போது கோக்ரா எனும் இசைக் கருவி இசைக்கப்படுகின்றது.

காணி மக்களின் மூங்கில் குடுவை, உண்டைவில், கத்தி, கோக்ரா எனும் இசைக்கருவி தீ உண்டாக்கப் பயன்படுத்தும் சிக்கிமுக்கிக் கல்லும், இரும்பு வைக்கப் பயன்படும் குடுவை, மூங்கில் தடி, சாதம் வடிக்கும் தட்டு போன்ற பொருட்கள் அவர்களின் இயற்கைச் சூழலுடன் காட்சி தருகின்றன.

## காட்டு நாயக்கர்:

காட்டு நாயக்கர்கள் தமிழகத்தின் தென் மாவட்டங்களில் உள்ள மலைக்காடுகளிலும், சமவெளியிலும் நிறைந்து காணப்படுகின்றனர். தற்போது படித்தும் தொழில் செய்தும் முன்னேற்றம் அடைந்துள்ளனர். இவர்கள் சிதம்பரனார் மாவட்டம் கோவில்பட்டி பகுதிகளிலும், சிவகிரி புளியங்குடி மலைகளிலும் வாழ்ந்து வருகின்றனர்.

இவர்கள் உபயோகத்தில் இருந்து வரும் ஆமைக்குத்தூசி,

பாய் முடை யப் பயன்படுத்தும் மிகச் சிறிய கத்தி, தேன் சேகரிக்கும் கூரைக்குடுவை, தண்ணீர் கொண்டு செல்லும் சிறிய கூரைக்குடுவைகள் போன்ற பொருட்களைச் சேகரித்து இங்கு காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

## ஆயுதங்கள்:

தமிழக மக்களிடையே பழக்கத்தில் இருந்து இப்போது உபயோகத்தில் இல்லாத பல வகையான ஆயுதங்கள் சேகரிக்கப்பட்டு இங்குள்ள ஆயுதங்கள் காட்சிப் பெட்டியில் காட்சி தருகின்றன. ஒரே நேரத்தில பலரையும் தாக்கக் கூடியதும், எதிரிகளிடம் இருந்து தற்காத்துக் கொள்ளக் கூடிய இரண்டு சுருள் வாள்கள், கட்டபொம்மன் உபயோகித்த வாள் ஒன்று சிவகாசிப் பகுதியில் இருந்து சேகரித்தது, எட்டையபுரம் ஜமீன்தார் திரு. ஆர். ஜே. எம். வி. எட்டப்பன் அவர்கள் நன்கொடையாக வழங்கிய விரி குழல் துப்பாக்கி, நான்கு குழல் துப்பாக்கி, தருமபுரியில் சேகரித்த ஜதர் அலியின் துப்பாக்கி, சிவகாசிப் பகுதியில் உபயோகத்தில் இருந்த இரும்பு மற்றும் மரவளைத்தடிகளும் காட்சிக்கு உள்ளன. இவை ஆயுதங்களின் வளர்ச்சியையும், உபயோகத்தையும் நமக்கு விளக்குகின்றன.

## நாட்டுப்புறக்கலைக்கூடம்:

பழங்குடி மக்களின் பொருட்களைத் தவிர இன்றும் நாட்டுப்புற மக்களின் கலை, பண்பாடு, சுடுமண் பொம்மைகள், கரகம், காவடி, பாவைக்கூத்து, திருஷ்டிப் பொம்மைகள், பொய்க்கால் குதிரை, வில்லுப்பாட்டுக்கருவிகள், காலாட்டக்குச்சிகள், கடவுளுக்குப் படைக்கும் கலையம்சமிக்க பொருட்கள், ஓலைப் பொருட்கள், ஆலியாட்டம் எனப்படும் கவசங்களின் அமைப்புகள் போன்றவற்றுடன் பலவித கிராமிய நடனங்கள் மற்றும் ஆட்டங்களின் புகைப் படங்களும், தெருக்கூத்து, புறவியாட்டம், காவடியாட்டம், கனியான் ஆட்டங்களின் புகைப்படங்களும் காட்சி தருகின்றன.

பாவைக்கூத்துக்களில் தோற்பாவைக் கூத்துக்குத் தேவையானதோற்பாவைகள் இராமர், சீதை, அனுமன்போன்ற உருவங்கள் தோலில் செய்யப்பட்டு வண்ணம் தீட்டப்பட்டு அவைகளில் ஒளி பாயும் வகையில் திரையில் தெரிய துளைகள்போடப்பட்டுள்ளன. இவை திரையில் பார்ப்பது போல் ஒளியுடன் துணியில் காட்சி தருகின்றன. அதிகமாக இராமயணக் காட்சிகளே காட்டப்படுகின்றன.

இவற்றுடன் ஆட்டத்திற்கும், நாட்டுப்புறப் பாடல்களில் இசை எழுப்பும் இசைக் கருவிகளும் காட்சி தருகின்றன. தவில், மத்தளம், நாதசுரம், ஒத்து, ஷெனாய், புல்லாங்குழல், டமாரம், மக்களுக்குச் செய்தியைத் தெரிவிக்குமுன் கிராமங்களின் இசைக்கப்படும் தமுக்கு, பூம்பூம் மாட்டு வாத்யம், பம்பை, உடுக்கை, டேப் [தப்பு] எனப்படும் தோல் இசைக் கருவிகளும் காட்சியில் உள்ளன. இவை நாட்டுப்புற மக்கள் இன்றும் நையாண்டி மேளத்திலும், இசைக் கருவிகளை மீட்டுவதிலும், தோற்பாவைக் கூத்திலும் எவ்வாறு தம் பொழுதைக் கழித்து மகிழ்கின்றனர் என்பதையும் நாட்டுப்புறக் கோயில்களில் நடைபெறும் திருவிழாக்களில் நாட்டு புறக் கலையின் மணம் எவ்வாறு வீசுகின்றது எனபதையும் அறிய முடிகின்றது.

## மரச்சாமான்கள்:

வீடுகளில் இன்று அலுமினியத்திலும், எவர்சில்வரிலும் அஞ்சரைப் பெட்டிகள் வந்து விட்ட போதிலும் மக்கள் முன்பு உபயாகித்து வந்த மரத்தில் செய்யப்பட்ட அஞ்சரைப் பெட்டிகள், பணம் வைக்கும் பெட்டிகள் மற்றும் வேலைப்பாடுமிக்க மரப்பாத்திரங்கள் காட்சிக்கு உள்ளன.

## மிருகங்களின் தலைகள்:

அக்கால மன்னர்களும், ஜமீன்தார்களும், ஆங்கிலேய அதிகாரிகளும் காட்டில் உள்ள கொடிய மிருகங்களை வேட்டையாடும் பழக்கம் உள்ளவர்களாக இருந்தனர். ஆங்கிலேயர்கள் பெரிய காட்டு எருமைகளை வேட்டையாடி தம் வீரத்தின் அடையாளமாக அவற்றின் தலையில் உள்ள சதைகளை நீக்கிவிட்டு பாடம் செய்து மிகப் பெரும் கொம்புகளுடனும் கண்ணாடிக்கண்களுடனும் பெரிய மரப்பலகைகளில் மாட்டி காட்சிக்கு வைத்தனர். இந்த அருங்காட்சியகத்தில் காட்டெருமையின் தலையும் மான்தலை அதன் பரந்த கொம்புகளுடனும் காட்சி தருகின்றன.

## சித்த மூலிகைச் செடிகள்:

தமிழ்நாட்டில் தொன்றுதொட்டு நாட்டுப்புற மக்களும், பழங்குடி மக்களும் மூலிகைகளின் அருமை பெருமை தெரிந்து மருந்துகள் தயாரித்து நோயைக் குணப்படுத்தியதோடு அறுவை

சிகிச்சைகளும் செய்துள்ளதாகக் குறிப்புகள் உள்ளன. தமிழகத்தில் உள்ள பல மூலிகைகள் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு அங்கு அவை மருந்துகளாக மாறி பல மடங்கு விலையில் இங்கு விற்பனை செய்யப்படுகின்றன.

தமிழக அரசும் சித்த மூலிகைகளுக்கும் ஓலைச்சுவடிகளில் எழுதி வைக்கப்பட்டுள்ள மூலிகைகளை ஆய்வு செய்யவும் மக்களை இந்திய முறையில் வைத்தியம் செய்து குணப்படுத்தவும் சித்த மருத்துவக் கல்லூரிகளையும், சித்த மருத்துவ மனைகளையும் மக்களுக்காகத் திறந்து சேவை செய்து வருகின்றது.

குற்றாலத்தில் உள்ள அருவி நீர் மலையில் உள்ள மூலிகைகளின் மீது தவழ்ந்து வருவதால் அந்நீரில் பலர் உடல் நலம் பெறுகின்றனர். மனவளர்ச்சி குன்றியோர் நல்ல நிலையை அடைகின்றனர். அதனால் தாவர இயல் பகுதியில் திருநெல்வேலி சித்த மருத்துவக் கல்லூரியில் இருந்து பெறப்பட்ட ஹெர்பேரியம் பிரஸ் செய்யப்பட்ட பலவித மூலிகைகள் விபரங்களுடன் காட்சிக்கு உள்ளன.

இத்துடன் மருந்து தயாரிக்கப் பயன்படும் காய்களும், பட்டைகளும், எண்ணைய் வித்துக்களும் கண்ணாடி ஜாடிகளில் காட்சி தருகின்றன.

## அற்றுப் போன விலங்குகள்:

சுமார் 500 மில்லியன் ஆண்டுகளுக்கு முன்பு முதன் முதலாக தாவர இனங்களும், சிறிய விலங்கினங்களும் கடலில் தோன்றின. சுமார் 200 மில்லியன் ஆண்டுகளுக்கு முன்னர் டைனோசார்கள்எனப்படும் ஒருவகை ஊர்வன இன விலங்குகள் தோன்றியது. இவ்விலங்குகள்சில மில்லியன் ஆண்டுகள் வாழ்ந்த பின்னர் முற்றிலுமாக அற்றுப் போயின. டைனோசார்களின் அழிவிற்குப் பின்னர் பறவைகளும் பாலூட்டிகளும் தோன்றின , பல்வேறு மாற்றங்கள் பெற்றுள்ளன.

பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் இராட்சசர்கள் வசித்தார்கள் என நம்புகின்றனர். அவர்களில் மிக மர்மமான இராட்சசனுக்கு மெலாந்த் ரோபஸ் என்று பெயர். அது குரங்குமல்ல, மனிதனுமல்ல. அது இரண்டு கால்களை ஊன்றி நடந்தது. தன் கைகளைக்

கொண்டு லேசாக மட்டுமே தன்னை தாங்கிக் கொண்டது. அது மனிதனையும், மிகப்பெரிய குரங்கைக்காட்டிலும் இரு மடங்கு பெரியதாக இருந்தது. யானையின் இனத்தைச் சார்ந்த மாஸ்டோடன், காண்டாமிருக இனத்தைச் சார்ந்த எலாஸ்மோதேரியம் ஆகிய இரண்டும் மகவும் பலமான மிருகங்கள்.

அடுத்து கிளிப்டோடோன் என்ற மிருகமும் அங்கே வசித்தது. அதுதான் உலகத்திலேயே கவசமணிந்த மிகப் பெரிய மிருகம். இது முள்ளெலியின் இனத்தைச் சார்ந்தது. யானை இனத்தைச் சார்ந்த டினோதேரியம் அதாவது ஆச்சரியமான விலங்கு, யானையைப் போன்றது. ஆனால் தந்தங்கள் வால்ரசைப் போல் கீழ்நோக்கி வளைந்திருக்கும்.

பூமியில் ஊர்ந்து செல்லும் மிகப் பெரிய பலம் வாய்ந்த பிராணிகள் டினோசார்கள் என்று அழைக்கப்பட்டன. இந்த வார்த்தைக்கு ப் பயங்கரமான, அதிசயமான பல்லி என்ற பொருள். இவை மற்ற விலங்குகளைக் கொன்று சாப்பிடும் பழக்கம் உடையவை. சிறு கைகளைக் கொண்ட பயங்கரமான பிராணியாகிய டினோசார் வாயில் கத்தியைப் போன்ற கூர்மையான பற்கள் இருந்தன. அதன் நீண்ட சதைப் பிடிப்பான வாலைத் தரையில் ஓங்கிஅடிக்கும்.

பூமியில் வசித்து ஊர்கின்ற பிராணிகளிலேயே டிப்ஸோடோக்ஸ் மிகவும் பெரியதாகும், பாம்பைப் போல் அதன் நீண்ட கழுத்தில் இருக்கும் சிறிய தலையை நீட்டி உயரமான மரத்தின் உச்சியை அல்லது அடிப்பகுதியைத் தொடமுடியும். உடம்பெல்லாம் உரோமம், நீண்டு வளைந்த தந்தங்கள். யானையின் உடலமைப்புக் கொண்ட மாபெரும் பிராணி. இதனை மம்மூத் யானை என்பர். இவை போன்ற பல தொல்லுயிரினங்களின் மாதிரிகள் பலவும் காட்சிப் பெட்டிகளில் அவை வாழ்ந்த பகுதியின் தோற்றத்துடன் காட்சிக்கு உள்ளன.

## கடல்வாழ் உயிரினங்கள்:

கடலின் உட்புறத்தைப் பார்ப்பது போன்று கண்ணாடிப் பெட்டியில் கடலை அடைத்து வைத்துள்ளது போன்ற அமைப்பில் பலவித நண்டுகளும், மீன்களும், கடல்பாசிகளும், கடல் அல்லிகளும், கடல் வெள்ளரி, நட்சத்திர மீன்களும், பவள மரங்கள், கடல் குதிரைபோன்றவை அவற்றின் சூழலில் காட்சி தருகின்றன. உள்புறம் மின் வெளிச்சத்துடன் இயற்கையான கடல் சூழல் காட்சிப் பெட்டி பார்ப்போரைக் கவரும் வகையில் காட்சி தருகின்றது.

## மீன் வகைகள்:

**கடல் நீரிலும், நன்னீரிலும் உள்ள மீன் வகைகளை கண்ணாடி ஜாடிகளில் பதப்படுத்தி மாணவர்கள் பார்த்து மகிழும் வகையிலும் மீன்களின் அமைப்பைத் தெரிந்து கொள்ளும் வகையிலும் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. மீன்களின் வண்ணங்கள் மறைந்து போனாலும் அவற்றின் அமைப்பு, செதில்கள் போன்றவை பார்க்கும் போது மாணவர்களையும், பார்வையாளர்களையும் கவரும்.**

## சூரிய மண்டலம்:

முதன் முதலில் உலகம் மிகவும் உஷ்ணமாகவும், திரவ நிலையிலும் இருந்தது. ஆனால், கோடிக்கணக்கான வருடங்களாக அது குளிர்ந்து வந்ததினால் மேற்புறத்தில் 20 மைல் பருமனளவிற்கு கரடு முரடான பகுதி தோன்றியது. அதற்கு கீழ் இரண்டு பகுதிகள் உள்ளன. இவற்றின் மத்தியில் திரவப் பொருளின் பகுதி உள்ளது.

புளூட்டோவும், மெர்க்குரியும் மிகச்சிறிய கிரகங்கள். நெப்டியூன், யூரேனஸ் ஒரே அளவில் உள்ளவை. சனிக்கிரகத்தைச் சுற்றி வளையம் உண்டு. ஜுப்பிட்டர் 87,000 மைலும், சனிக்கிரகம் 72,000 மைலும் குறுக்களவைக் கொண்டவை.

சூரிய மண்டலத்தைச் சுற்றி ஒண்பது கிரகங்களும் ஒரே வட்டத்தில் புளூட்டோவைத் தவிர அனைத்தும் அமைந்துள்ளன.

மாணவர்கள் பார்த்து அறிந்து கொள்ளும்விதமாக இவை காட்சிப் பெட்டியில் ஓவியங்களின் மூலம் விளக்கப்பட்டுள்ளன.

## கனிமங்கள்:

கனிமம் என்பது குறிப்பிட்ட அணுவின் பண்புகளை உடைய இயற்கையான அனங்கக வேதிய கலை பொருள். இவை **அனுகூலமான நிலையில் படிகங்களாகும் குறிப்பிட்ட வடிவங்களைப் பெறுகின்றன. இவ்வடிவங்கள் கனிமங்களை அடையாளம் கண்டு கொள்வதற்கு உதவுகின்றன. கனிமம் என்ற சொல் இயற்கையான அனங்கக பொருட்களைக் குறிக்கும். இருப்பினும் கரி மற்றும் பெட்ரோல் ஆகியவை அனங்கக மூலக்கூறுகளானவை. கனிமங்கள் தொழிற்சாலைகளின் முதுகெலும்பாக விளங்குகின்றன.**

கிரைசோலைட், சுண்ணாம்புக்கல், நாட்டிலாயிட்ஸ், அம்மோனைட், டுரிலைட்ஸ், பிக்ரோலைட், பெக்மடைட், கர்டியரைட், குவார்ட்ஸ், சில்மனைட், டிரிம் போலைட், கலீனாபைரைம், டோலமைட், ஹேமடைட், புளூரைட் பைரட் போன்ற கனிம வகைகள் பதினைந்து காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

சுண்ணாம்புக்கல்லில் இருந்து பற்ற வைக்கும் கேஸ், குவார்ட்ஸ் கல்லில் கடிகாரம் ஓட வைக்கும் கல் மற்றும் சிமெண்ட், ஆஸ்பெஸ்டாஸ், அலுமினியம் போன்ற பொருட்கள் தயாரிக்கவும் கனிமங்கள் உதவி புரிகின்றன.

## கல்மாறிகள்:

பாசில்கள் எனப்படும் கல்மாறிகள் காட்சிப் பெட்டியினுள், திருச்சி அருகில் அரியலூரில்தோண்டி எடுக்கப்பட்ட கடல் வாழ் தொல்லுயிரினங்கள் கல்லாக மாறி காட்சி தருவதைக் காணலாம். பழங்காலத்திய காட்டிலுள்ள மர இலைகளின் புதைவடிவம், மீன்களின் புதைவடிவம், நத்தை சிப்பிகளில் புதை வடிவங்கள், நிலக்கரிக்குத் தோண்டும்போது காணப்பட்டு அவை காட்சிக்கு உள்ளன. திருவக்கரையில் பல மரங்கள் புதையுண்டு அவை கல் மரங்களாக மாறியுள்ளன.

பல கோடி ஆண்டுகளுக்கு முன் திருச்சி பகுதி கடலாக இருந்துள்ளது என்பதை இந்த அரியலூர்க் கல்மாறிகள் மூலம் அறிய முடிகின்றது.

## ஓலைச் சுவடிகள்:

சுவடிகள் அறிவின் உருவங்களாக பண்டையோரால் போற்றப்பட்டுள்ளன. சிவபெருமான் ஆகமங்களையும், நிறுத்தம் முதலிய கலைகளையும் எடுத்துரைக்கும் பெருங்கடவுள். ஆதலின் அவரைத் தட்சிணாமூர்த்தி வடிவில் படைத்து அவரது இடது கரத்தில் ஓலைச் சுவடிகளைச் சிற்பங்களில் காண்பித்துள்ளனர். மதுரை அருங்காட்சிய கத்திலுள்ள ஒரு சோழர் கால மாணிக்க வாசகரின் கையில் சுவடி ஒன்றுடன் 'நமச்சிவாய' என்ற எழுத்துக்களுடன் செப்புத்திருமேனி காணப் படுகின்றது. அதே போல் கலையின் இருப்பிடமான சரசுவதியுடன் கரத்தில் ஓலைச் சுவடியைக் காண்கிறோம். இவை அறிவை தெய்வமாகப் போற்றி அவற்றைச் சுவடிகள் மூலமாக வெளிப்படுத்த ஆன்றோர் கண்ட

முறை எனலாம். தில்லையில் உள்ள மாணிக்க வாசகர் சுவடியில் ''திருச்சிற்றம்பேர்'' என்றுள்ளது. இவ்வாறு தெய்வத் திருப்பதிகங்களைப் பாடிய ஆன்றோரைச் சுவடிகளுடன் காண்பித்து சுவடியின் சிறப்பை உலகுக்குக் காண்பித்துள்ளனர் நம் முன்னோர்.

ஓலைச் சுவடிகள் என்றாலே சங்க நூல்கள், சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய இலக்கியங்களுமே நம் கண்முன் வரும். அந்த அளவுக்கு இலக்கியச் சுவடிகளின் பெருமையை எடுத்துரைத்தவர் உ.வே. சாமிநாதய்யர் அவர்களாகும். இதுபோல் நம் வைத்திய நூல்களும் [சித்த வைத்தியம், ஆயுர்வேதம்] ஓலைச் சுவடிகளில் எழுதி வைக்கப்பட்டன.

சுவடிகளில் சில இவ்வருங்காட்சியக சேமிப்பில் உள்ளன. சுவடிகளை நாம் அழிப்பது, ஆற்றில் எறிவது, குவித்துக் கொளுத்திக் குளிர் காய்வது செய்யோம். சுவடியைக் கொளுத்தும் மடமையைக் கொளுத்துவோம். அறிவியல் அறிவைக் கொண்டு வேதியியல் முறையைக் கொண்டு பாதுகாப்போம். புரிந்து கொள்வோம். இது மரபைக் காக்கும் வழி எனப் பெருமை அடைவோம்.

## ஓவியங்கள்:

நெல்லை மாவட்டம் அம்பாசமுத்திரம் அருகில் 8 கி. மீட்டர் தூரத்தில் இடைகால் என்ற சிற்றூர். இவ்வூர் சிவாலயத்தில் தியாகராச சுவாமியாக கிழக்கு நோக்கி அமர்ந்துள்ளார் சிவ பெருமான். கி. பி. 16ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இக்கோயில் கோபுரம் மூன்று அடுக்குகளைக் கொண்டது. இக்கோபுரத்தின் நுழைவாயிலில் மேல்புறத்தில் பல ஓவியங்கள் உள்ளன. இவற்றில் சிலவற்றை புகைப்படமாக்கி காட்சிக்கு வைத்துள்ளோம். அவற்றுள் பசுபதி அஸ்திரா கதை, பிக்ஷாடனராக சிவன், பிரம்மன் புனித வேள்வி எழுப்புதல், ஹரிஹரன், காளிகா நர்த்தனம், தென்முகக்கடவுள், மீன் மற்றும் பூ வேலைப்பாடுகள், ஆடுச்சண்டை,கோழிச்சண்டை, காளைச்சண்டை, வரிசையாகக் குரங்குகள், சேஷசாயராகத் திருமால், ஊர்த்தவ தாண்டவ மூர்த்தியாக நடராசர் மற்றும் ஏகபாத மூர்த்தியின் ஓவியங்கள் வண்ணத்தில் காட்சி தருகின்றன.

சிவனும் பார்வதியும் நந்தியின் மீது அமர்ந்து காட்சி தருவது எழிலாக உள்ளது. அர்ஜுனன் கைகளை விரித்து நிற்க சிவன்

பசுபத அஸ்திரத்தை வழங்குவது போல் உள்ளது. ஊர்த்தவ தாண்டவத்தில் அவரது வலது கால் மிகச் சரியாகத் தூக்கிய நிலையில் உள்ளது.

அம்பாசமுத்திரம் அருகில் உள்ள திருவிடைமருதூர் கோவிலில் அழகுமிக வண்ணச் சுவரோவியத்தின் வண்ணங்கள் கண்களுக்கு விருந்தளிப்பதோடு அவற்றின் வீரமிக்கப் போர்க் காட்சிகளும் குதிரைகளின் அமைப்பும், வீரர்களின் ஆடைகளும், ஏந்தி நிற்கும் ஆயுதங்களும் இங்கு வண்ணப் புகைப்படத்தில் காட்சி அளிக்கின்றன.

இந்த அருங்காட்சியகத்தில் ஓவியக்கூடத்தில் எண்ணைய் வண்ண ஓவியங்களும், நீர்வண்ண ஓவியங்களும், கலம் காரி மற்றும் பாதிக் ஓவியங்களும் எழிலாகக் காட்சி தருகின்றன. நவீன பாணி ஓவியமாக நாட்டியமாடும் கணேசரை ஓவியர் திரு. டி. விசுவநாதன் நவீன பாணியில் வண்ணமயமாகக் காட்டியுள்ளார். நான்கு கரங்களுடன் ஆடும் கணேசர் தம் தலையில் பிறைச் சந்திரனையும், வலது மேல் கரத்தில் மழுவும் இடது கரத்தில் பாசக்கயிற்றையும் கீழ் வலது கரம் அபய முத்திரையுடனும் இடது கரத்தில் ஞானப்பழமும் அதன் விரல் நுனியில் மலரேந்திய நங்கையையும் துதிக்கையைத் தலைக்கு மேல் தூக்கி அதன் நுனியில் இரு நடனமாதர் நாட்டியம் ஆடுவது போன்றும் வரைந்துள்ளார்.

எம். பாலசுப்ரமணியன் எனற ஓவியர் போஸ்டர் கலரில் பெரஸ்கோ எனப்படும் கவர் ஓவியம் போல் அன்னர் மடியில் குழந்தை அமர்ந்து இருப்பது போலவும் பக்கவாட்டில் ஆண்களும் பெண்களும் விதவிதமான ஆடையணிந்து வாழ்த்துவது போலவும் அருகில் தமிழ்க் கல்வெட்டுக்கள் பொறித்தது போன்றும் வரையப்பட்டுள்ளது. லெபாக்ஷி ஓவியத்தின் கண்கள் இதில் தெரிகின்றன.

மைசூரைச் சார்ந்த வாசுதேவாச்சாரியின் உருவத்தை வரைந்த வி. இராமகோபால் என்ற ஓவியர் எண்ணை வண்ணத்தில் மிகத் தத்ரூபமாக வயதான தோற்றத்துடன் சிரிக்காத முகத்துடன் அழகாக வரைந்துள்ளார். ஓவியர்கே. எஸ். கோபாலின் 'ஓம்' எனும் கிராபிக் ஓவியம் நடுவில் ஓம் எழுத்தில் இருந்து உலகம் தோன்றியுள்ளதை விளக்கியுள்ளார். ஓவியர் கே. எஸ். குருபரன் தேவலோக அரண்மனையையும், ஆவிகள் பறந்து மேகங்களுக்குச் செல்வது போன்றும் வரைந்துள்ளார். இது ஒரு எண்ணை வண்ண நவீன பாணி ஓவியமாகும். ஓவியர் ஜி. ராமன், அக்ரிலிக் வண்ணத்தில் கருப்பு வெள்ளையாக தப்பு வாசிக்கும் இசைக் கலைஞரையும், கிராம வீடுகளில் ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளதையும்

விவரித்துள்ளார். மாரீசனாக மானைக் காட்டி அதில் பல அம்புகள் தைத்து நிற்பது போன்றும் உள்ளதைப் பார்க்கும்போது இராமாயண காவியத்தை விளக்குவது போல் உள்ளது. கூடலூர் அச்சுதன் மழைத்தூறலையும் வண்ணத்தில் மேகங்களையும் கற்பனை செய்து வரைந்து உள்ளார்.

இவை தவிர கலம்காரியில் மகாபாரதப் போர், காளியகிருஷ்ணன் காளியன் எனும் நாகத்தின் தலையில் நாட்டியம் ஆடுவது போன்றும், இராமர் திருமணம் நடக்கும் விழாவும் அதன் இயற்கை வண்ணத்தில் துணி ஓவியங்களாகக் காட்சி தருகின்றன. ஓவியர் இலக்குமணன் வரைந்த நேதாஜி பர்மாநாட்டில் தமது இராணுவ உடையில் நின்று கடிதம் படிப்பது போன்ற ஓவியம் சிறப்பாகவே உள்ளது. ஓவியர் அப்துல் ரகீம் வரைந்துள்ள பாதித்துணி ஓவியத்தில் ஆடவல்லான் நடராசப் பெருமான் ஆடும் கோலத்தில் காட்சி தருகிறார். பரத நாட்டியத்தின் பலவித கர்ணங்களும் கிருட்டிணன் அர்ஜுனனுக்கு உபதேசம் செய்யும் பாதிக் ஓவியங்களும் மிகப்பழமையான நம் கலைகளின் தன்மையை நமக்கு உணர்த்துகின்றன.

****************************